உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று

மாதந்தோறும் வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

பதினெட்டாந்தொகுதி.

VOL-XVIII.




பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1919—1920.

# செந்தமிழ்ப்

# பதினெட்டாந்தொகுதியின் உள்ளுறை.

---

இத்தொகுதியில் வெளிவந்த நூல்—

(முற்றுப்பெறாதது.)



---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கஅ.] சித்தார்த்தி௵ கார்த்திகை௴ [பகுதி க.

Vol. XVIII. November—December 1919. No. 1.

## முச்சங்க வரலாறு

செந்தமிழ் தொகுதி கஎ. பகுதி க௦. ஆகிய சென்ற ஆவணி மாசப் பத்திரிகையில், "தமிழ்ச்சங்ககாலம்" என்னும் தலைப்பின்கீழ் முச்சங்க வரலாறு ஒப்பத்தகுந்ததில்லையென்று, ஸ்ரீமத் கே. ஜி. சங்கரையர் கூறுகின்றார். இதற்குரிய சான்றுகளென அவர் காட்டுமவைகளை ஆராய்ந்து உண்மை நிலையிடலே எமது நோக்கமாகும்.

2. தலை, இடை, கடை என மூன்று சங்கங்கள் இருந்தன என்னுங்கொள்கை வழங்குவது கடைச்சங்கமும் இருந்து முற்றியபின்பேயாம் என்பது யாவரும் ஒப்பத்தகுந்ததொன்றாகும். ஆகலின் கடைச்சங்கமிருந்து ஒழிந்து அணித்தான காலத்தில் வெளிவந்தகளவியலுரைக்குமுன் முச்சங்கவரலாறு கூறப்பட்டிருக்கும். என அவாவுவது நியாயமல்ல. இனி அவ்வுரையோடொத்த காலத்தனவாகிய நூல்களிலும் பிற்காலத்தினவாகிய நூல்களிலும் கூறப்பட்டதோ எனின். அடியார்க்குநல்லார்க்குமுன்னுள்ள காலத்திற் செய்யப்பட்ட நூல்களெல்லாம் எமது கைக்கெட்டியிருப்பின் அந்நூல்களிற் சொல்லப்படாமையை ஓர் சான்றாக ஒருவாறு கொள்ளலாம். அப்படியன்றி சிதல்வாய்ப்பட்டும், எரிவாய்ப்பட்டும், ஆழிவாய்ப்பட்டும் அழிந்தவைபோக எஞ்சிய சில நூல்களே எமக்குக்கிடைத்திருக்கின்றன. இச்சிலநூல்களிற் சொல்லப்படாமைகொண்டு, சிறந்த சான்றாகிய களவியலுரையிற் காணும் முச்சங்கவரலாற்றில் ஐயுறுதல் அறிஞர் ஆராய்ச்சிக்கழகல்ல.

மேலும், களவியலுரைக்குமுந்திய கடைச்சங்க நூலாகிய மதுரைக் காஞ்சியில்,

> தொல்லாணை நல்லாசிரியர்
> புணர்கூட்டுண்ட புகழ்சால்சிறப்பின்
> நிலந்தருதிருவினெடியோன். எனக்கூறப்படுதலின்

கடைச்சங்கத்துக்கு முன்னும் ஒரு சங்கங்கூட்டுண்டமை விளங்கக் கிடக்கின்றது. ஆகலின், ஸ்ரீமத். சங்கரையர் சங்கமொன்றேயிருந்தது என்பது பொருந்தாது.

3. முடிநாகராயர். புறநானூற்றைத்தொகுத்தோர் இவர் பாடலையும் அதிற் சேர்த்திருப்பதுபற்றி இவரை கடைச்சங்ககாலத்தார் எனக்கொள்வது சரியன்று. இவருடைய பாடலிற் சொல்லப்பட்டவற்றைக்கொண்டு, இவர்காலத்தை நிச்சயிப்பதே தக்கது. செய்யுளின் இயலையும் நடையையுங்கொண்டு அதன் காலவரையறைசெய்தல் மேலைத்தேசமேதாவிகளும் அவர்களைச் சிறிது பின்பற்றியோரும் கைக்கொள்ளும் முறையாயிருப்பினும், அம்முறை எப்போதும் உண்மையோடு பொருந்தாது. செய்யுளின் இயலும் நடையும், அவரவர்கற்ற கல்வியினளவுக்கும் அதிகமாய்ப்பயின்ற நூல்களினியலுக்கும், சொல்லப்புகும் விஷயத்துக்கும், செய்யுள்வகைக்கும் ஏற்றதாகவே இருக்கும். ஒருவர் பாடுவதிலேயே வெண்பா வெளிதான நடையும் மற்றவை பொருள் அரிதுணர்கடுநடையும் உள்ளனவாகக் காண்கின்றோம். கடைச்சங்கச் செய்யுட்களுக்கும்; அந்நூல்களை ஆசையோடு கற்று அவற்றினியலும் நடையும் கைவரப்பெற்ற சிலர் பிற்காலத்துச் செய்த செய்யுட்களுக்கும் வேற்றுமை மிகச்சிறியதாக இருப்பது காண்கின்றோம். ஆகலின், தலைச்சங்கப்புலவராகிய முடிநாகராயர் செய்த செய்யுள், கடைச்சங்கப்புலவர் செய்த செய்யுட்களோடு இயலும் நடையும் ஒற்றுமைப்படுதல் நூதனமல்ல. அது ஈண்டைக்குச் சான்றாக உதவாது, இனி,

> "இவரொடுசினைஇ, நிலந்தலைக்கொண்ட..................
> ஈரைம்பதியின்மரும்பொருதுகளத்தொழிய."

என்பதற்கு புறநானூற்றுரைகாரர் சொல்லும் பழையகருத்தைவிட்டு ஒரு நவீன கருத்துப்படைக்கும் ஸ்ரீமத் சங்கரையர் "நூலியற்றி மிக்ககாலமானபிறகே வகுக்கப்பட்ட உரைதக்க சான்றாகாது" என்று

சொல்லியபடியால், இன்னும் அதிக மிகக்காலமானபிறகே தாம் வகுக்கும் புதிய உரையும் சான்றாகாது என்று சொல்லாமற் சொல்லிவிட்டார். ஆயினும் இவர் வகுக்கும் உரைபோலியுரையே என்பதைக் காட்டுவோம். செய்யுளில் "ஐவர்" என்பது பன்மையாகலின் மாறுவேந்தரைவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனாகிய ஒருவனைக்குறிக்காது பாண்டவர் ஐவரையே குறிக்கும். "ஈரைம்பதின்மரும்பொருது களத்தொழிய" என்பதனால் நூற்றுவரும் போர்க்களத்தில் இறந்துபட்டார் என்பதேபோதரும். இது தோல்வியடைந்து பிழைத்திருந்து பின்னர் செங்குட்டுவனுக்கு வங்கமுதவிய நூற்றுவர் கன்னரைக் குறிக்காது களத்தில் இறந்தொழிந்த துரியோதனாதியரையேகுறிக்கும் ஆகலின் இப்புறப்பாட்டுக்கு இதுகாறும் தமிழ் அறிஞர் கொண்ட கருத்தே உண்மைக்கருத்தாய், முடிநாகராயர் பாண்டவருக்கும் கௌரவருக்கும் நிகழ்ந்த பாரதப்போரையே குறிப்பிட்டுள்ளாரென்று முடிகின்றது. ஆகலின் ஸ்ரீமத் சங்கரய்யர் நவீனகருத்துப்பிரியராய்ப் படைத்த கருத்து தவறு.

4. அகத்தியனார். நன்னூல்மயிலைநாதருரையையும், Mr. Dubreuil என்பவரையும் நம்பி, அகத்தியனாரை, கி. பி. 200-க்கும் பின் இழுத்துவிடத்துணிந்த ஸ்ரீமத் சங்கரையர், மயிலைநாதருரைக்கு எவ்வளவோ காலத்துக்கு முந்தியும் கடைச்சங்ககாலத்துப்புலவசிகாமணியின் மாணவபரம்பரையில்வந்த கல்வியறிவாற்றலாற் சிறந்தவர் சொல்வதைப் பொருட்படுத்தாதது என்னோ? அகத்தியனார் தலையிடைச்சங்கங்களிலிருந்ததாகக்கூறுப்படின், அவ்விரண்டிலொரு சங்கத்திலாவது இருக்கவில்லையென்றது பொருத்தமான முடிபல்ல. இரண்டு சங்கங்களிலும் ஒரே அகத்தியனார் தாமிருந்தாரென்னினும், ௪௪௪௰ யாண்டு உயிர் வாழ்தல் தவத்திற் சிறந்த அம்முனிவர்க்குப் பொருத்தமில்லாததுமல்ல. முற்காலத்து மக்கள், இப்போது நம்ப அருமையான நெடுநாட்களுக்கு உயிர் வாழ்ந்தார்களென்பது பலபல சாதியாருள்ளும் பழைய சரித்திரங்கள் ஒத்துச்சொல்லும் ஒன்றாம். இது உண்மைதானோ அல்லது கணிதவேறுபாடோ என்பது தெரியவில்லை. இது எப்படியிருப்பினும், தலைச்சங்கத்தில் ஓரகத்தியனாரும், இடைச்சங்கத்தில் அப்பேர் கொண்ட இன்னொருவரும் இருந்தாரெனக்கொள்வதே யுக்திக்குமிக பொருந்துவதாம். பேரகத்தியம் சிற்றகத்தியம் என்ற வழக்கும் இதை

வலியுறுத்தும். இனி "குட்பாலிருபுறச்சையத்"திருந்த தமிழ்திரி நிலங்களுள் பல்லவமும் ஒன்றென்றார்" இவ்வகத்தியனாரே என்ற கூற்றி னுண்மையில் ஐயமுடையேம். தலைச்சங்க நூலாகிய அகத்தியஞ்செய் தவரே இப்படிச்சொல்லினாரென்பது காட்டப்பட்டால் Mr. Dubreuil சொல்லியது பொய்யாகுமேயன்றி, அகத்தியனார் கி. பி. 200-க்குப் பிறகே இருந்தவர் என்பது மெய்யாகாது.

5. தொல்காப்பியனார். இடைச்சங்ககாலம் ௩௭00. யாண்டா தலால் கடைச்சங்க நூல்களினின்றும் அவ்வளவுகாலத்துக்குரிய நடை பொருள்களில் மாறுதல்களொன்றும் தொல்காப்பியத்திற் காணப்படா தது வியப்பே! என்கின்றார் ஸ்ரீமத் சங்கரையர்; இது வியப்பல்லவே யென்கின்றேம்யாம்: ஏனெனில், தொல்காப்பியத்திலும் அதனோ டொத்தகாலத்தனவாகிய நூல்களிலும் மிகவுந்தேர்ந்த பயிற்சியுடைய ராய் இருந்தவர்கள் கடைச்சங்கப்புலவர்கள் என்பதற்கு வேறு சாட்சி வேண்டாம், தொல்காப்பியத்திற் பகுக்கப்பட்ட திணை துறைகளின் பாற்படுத்தே தங்கள் செய்யுட்களையாக்கியிருப்பது போதிய சான்றும் ஆகையாற்றான் இவர்கள் பயிற்சியினியல்பால் தொல்காப்பியத்தின் நடைபொருள்கள் இவர்கள் செய்யுட்களிலும் வந்தேறியனவாம். இவ் வொற்றுமைகொண்டு கடைச்சங்கச்செய்யுட்களையும் தொல்காப்பியத் தையும் ஒரு காலத்தவெனக் கொள்ளுதல் தவறு.

6. முச்சங்கவெண்கள். "களவியலுரைதரும்எண்களும் வியக் கத்தக்கன" என்கின்றார் ஸ்ரீமத் சங்கரையர். ஆம், வியக்கத்தக்கன தாம் மறுக்கத்தக்கனவல்ல, ஏனெனில் இவர் காட்டும் கணக்கின்படியும், தலையிடைச்சங்ககாலங்களிலே முறையே ௫0, ௬௨, ௩௮, ஆண்டுகள் ஒவ்வொரு பாண்டியற்கும் ஆளுகைக்காலமாக வருகின்றன. இவை மிகையல்லவே. ஏனெனில், அக்காலம் உலகத்தை ஆளுவோர் அர சியலை தமது போகமாத்திரையாக நினைத்துநடவாது "கொடிது கடிந்து கோல்திருத்தி, படுவதுண்டுபகலாற்றி" "குடிபழிதூற்றுங் கோலி" னராகாது, "அறந்துஞ்சுசெங்கோல"ராய், உயிர்களை "குழவி கொள்பவரினோம்பி" "புலிபுறங்காக்குங்குருளைபோல" அறநீதிகளைப் பாதுகாத்து விருத்திசெய்து வளம்படவாழ்ந்த செழியர்க்கு ஆளுகைக் காலம் ௫0, ௬௨, ௩௮, எனவருவது நூதனமல்ல; இது மிகமட்டமான கணக்கு. இதிலும் மிகுத்துவரவில்லையே என்பதுதான் நூதனம். அற

நெறியொழுகுவார்க்கு வாழ்நாட்பல்குதலியல்பாம், இதையறியாது முச்சங்கவரலாற்றை தாம் நம்பாமைக்கு இதையும் ஒரு சான்றாகப் பிடித்தாரே இது பரிதாபம்!

பாண்டியர் தொகை ௮௯, ௫௯, ௪௯ எனவருவதில் என்ன குறையோ? ஒன்பதிற்றாகிய எண்கள் பாண்டியர் தொகையில் வரப்படாதெனும் நியதியுண்டா: புலவர் தொகையில் இவை வரப் படாதெனும் நியதியும் உண்டா? அல்லது பாண்டியர் தொகை, புல வர் தொகை இரண்டினும் இவைவரப்படாதெனும் நியதிஉண்டா? அப்படி ஒரு நியாயமுறையும் இல்லையே. கவியரங்கேறிய பாண்டியர் தொகை ௭, ௫, ௯, என்றிருப்பின் ஒப்பத்தகுந்ததில்லை யென்றால், பின் எப்படியிருப்பின் ஒப்பத்தகும்? ஸ்ரீமத் சங்கரைய்யர் இவ்வெண் களைக்கொண்டு காட்டும் நியாயம் சிறிதேனும் ஒப்பத்தகுந்ததில்லை. சங்ககாலக்கணக்கையும் பிரித்துக்கூட்டி ஒரு வித்தைகாட்டுகின்றார். இவ்வித்தைக்கு இடங்கொடாமற் சங்ககாலக்கணக்கு இருக்கவேண்டு மென ஸ்ரீமத் சங்கரையர் விரும்பின் இப்போது என்செய்யலாம். சங்க காலங்கழிந்து போய்விட்டதே! ஆயினும் இது ஒரு நியாயமுறையிற் சேர்ந்ததல்ல.

7. பொய்யடிமையில்லாத புலவர் நம்பியாண்டார் நம்பிதலை இடைகடை என்னும் மொழிகளை வழங்காமைபற்றி, அச்சங்கங்கள் இல்லையென்றுவது, அவர் அப்பிரிவுகளையறிந்ததில்லை யென்றுங்கொள்வதும் நியாயமுறையல்ல. நம்பிசங்கங்களைப்பற்றி ஆராயப் புகுந்தாரல்லர், பொய்யடிமையில்லாத புலவரைப்பற்றியே சொல்லப் புகுந்தார். "பொய்யடிமையில்லாத புலவர்" என்றன் மாத்திரையானே, அவர் இன்னார் என்று தம்காலத்தவர் விளக்கிக்கொள்வார் என்றதே திருத்தொண்டத்தொகையுடையார் கருத்து. அவர்க்குப்பின் வந்த நம்பியாண்டார் நம்பியும், அப்புலவர் நன்றாக அறியப்பட்டவராகலின், நக்கீரர், கபிலர், பரணர் முதல் ௪௯ தமிழ்ச்சங்கப்புலவரே என்று சொல்லி, தலையிடைகடை யெனும் பிரிவுணர்ந்தவர்கள் தாமே யுய்த் துணர்ந்துகொள்ளவைத்தமையின், கடைச்சங்கமென்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லாதாயிற்று. அன்றியும் முச்சங்கவர லாற்றை ஒப்புக்கொண்ட இக்காலத்தாரும், சங்கத்தமிழ், சங்கநூல், சங்கப்புலவர் எனப்பொதுவகையாக வழங்குவதே பெருவழக்கு. இது

கொண்டு இவர் தலையிடைகடைச் என்னும்பிரிவினை அறியார் என்று முடிவுகட்டுதல் பொருந்தாது.

இவ்வாறு பொருத்தமில்லாத போலிக்கொள்கைகளைக்கொண்டு முச்சங்கவரலாற்றினை மறுக்கத்துணிந்த ஐயரவர்களின் முடிபு பிழையுள்ளதெனக் காட்டிவிட்டாம். ஆகவே தலை, இடை, கடை எனப் பிற்காலத்து அறியப்பட்ட மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்தன என்பது, களவியலுரைகாரர், அடியார்க்கு நல்லார் முதலிய பல ஆசிரியராலும் உண்மையெனச் சொல்லப்பட்டதும், உடன்கூறப்படுவதாகிய தமிழ்நாடுகளும் நூல்களும் வெள்ளத்தழிந்தகதை பிறபல அறிஞரால் ஒப்புக்கொள்ளப்பட்டமையாகிய இடைச்சான்றால் வலியுறுத்தப்பட்டதும் ஆகிய ஓர் உண்மையே என்று பெறப்பட்டது.

மு. தம்பையா,
(சீப் அக்கவுண்டிங்கு கிளார்க்கு போர்ட்டு கமிஷன்,
கொழும்பு.)

---

உ

சிலப்பதிகாரத்திலிருந்து
இராமாவதாரம் முதலிய நூல்களில் வந்துள்ளன

# மூன்றாவது அரங்கேற்றுகாதை நிர். 2.

௧-௭. தெய்வ மால்வரைத் திருமுனியருள
எய்திய சாபத்திந்திர சிறுவனொடு
தலைக்கோற்றானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற்குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற்குன்றாப் பெருந்தோண் மடந்தை
தாதவிழ் புரிகுழன் மாதவிதன்னை.

இராமாவ-ஆரணிய-அகத்தியப்படலம்-20.

மூசரவுகூடு முதலோனுரையின் மூவா
மாசிறவ வேகென வடாதுதிசை மேனாள்

நீசமுற வாணினெடு மாமலய கோரா
ஈசனிகரா யுலகுசீர் பெறவிருந்தான்.

சிலப்பதிகாரம்.

கல-கக ஏழாண் டியற்றியோ ரீராறாண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல்வேண்டி.

இராமா-பால-அரசிய-க.

அம்மாணவருக் கரசன் னரசர்க்கரசன்
செம்மாண்டனிக் கோலுலகேழினுஞ் செல்லநின்றான்
இம்மாண்கதைக் கோரிறையாய விராமனென்னும்
மொய்ம் மாண்கழலோற்றரு நல்லற மூர்த்தியன்னான்.

சிலப்பதிகாரம்.

கஉ-உ௫. இருவகைக் கூத்தி னிலக்கண மறிந்து
பல்வகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோராடலும் பாட்டுங் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்கவறிந்தாங்
காடலும் பாடலும் பாணியுந் தூக்கும்

இராமா-பால-நகர-கசு.

வடவுங் கூடவு முயிரினின்னிசை
பாட்வும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவும் நன்புனலாடி யம்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர்.

சிலப்-இசையாசிரியன் அமைதி.

உசு. யாழுங் குழலுஞ் சீருமிடறுங்.

இராமா-பால-உண்டாட்-கஉ.

யாழ்க்கு மின்குழற்கு மின்பமளித்தன விவையாமென்னக்
கேட்டுமென் மழலைச் சொல்லோர் கிஞ்சுகங் கிடந்தவாயாள்
தாட்கருங்குவளைதோய்ந்த தண்ணறைச்சாடியுட்டன்
வாட்கணி னிழலைக்கண்டாள் வண்டென வோச்சுகின்றாள்.

# செந்தமிழ்

சிலப்பதிகாரம்.

சஉ-சஎ. ஆடல் பாடலிசையே தமிழே
பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிகமென் றிவை யாசி னுணர்ந்து

இராமா-ஆரணி-மாரீச-கஉ.

சேனுயர் நெறிமுறை திறம்பலின் றியே
பாணிகள் பணிசெய்யப் பழுதில் பண்ணிடை
வீணையினரம்பிடை விளைத்தவேதமறை
ஆணியினாதன் செவியின்வார்க்கவே.

சிலப்பதிகாரம்.

ஙங. அத்தகு தண்ணுமை யருந்தொழின் முதல்வனும்.

இரா-பால-நகர-ஙஉ.

பதங்களிற் றண்ணுமை பாணிபண் ணுற்
விதங்களின் விதிமுறை சதிமிதிப்பவர்
மதங்கிபரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைகளல்லன புரவித்தார்களே.

சிலப்பதிகாரம்.

எo-எச. ஈரேழ்தொடுத்த செம்முறைக் கேள்வியி
னோரேழ்பாலை நிறுத்தல் வேண்டி
வன்மையிற்கிடந்த தாரபாகமு
மென்மையிற் கிடந்த குரலின் பாகமு
மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்

இராமா-அயோத்தி-சித்திர-உஅ.

குழுவுதண்டொளை வேயினுங் குறிநரம்பெறிவுற்
றெழுவுதண்டயிழ் யாழினுமினிய சொற்கிளியே
முழுவதும்மலர்விரிய காண்முருக்கிடைமிடைந்த
பழுவம் வெங்கனல் கதுவியதொப்பன பாராய்.

சிலப்பதிகாரம்.

கக-கச. வலிவுமெலவுஞ்சமனு மெல்லாம்
பொலியக் கோத்த புலமையோனுடன்.

இராமா-கிஷ்கி-நட்பு-எச.

உலகமேழினு டேழும்வந்தவ னுயிர்க்குதவி
விலகுமென்னினும் வில்லுடைவாளியின் வீட்டித்
தலைமையோடு நின்றாரமு முனக்கின் று தருவேன்
புலமையோயவனுறை விடங்காட் டென் றுபுகன்றான்.

சிலப்பதிகாரம்.

கஙு-கக. எண்ணிய நூலோ ரியல்பின் வழாது
மண்ணக மொருவழி வகுத்தனர் கொண்டு.

இராமா-பால-நகர-அ.

நால்வகைச்சதுரம் விதிமுறைநாட்டி நனிதவவுயர்ந்தனபனிதோய்
மால்வரைக்குலத்தில் பாலவயுமில்லை யாதலானுவமை மற்றில்லை
நூல்வரைத்தொடர்ந்து பயத்தொடும் பழகி நுணங்கிய
நுவலருமுணர்வே
போல்வகைத்தல்லால் அயர்விளுேயொந்த தென்னலாம்
பொன்மதினிலையே.

சிலப்பதிகாரம்.

கஉக-கஉஉ. புண்ணிய நன்னீர் பொற்குடத்தேந்தி
மண்ணிய பின்னர் மாலை யணிந்து

இராமா-அயோத்தி-நகர்நீங்கு-டுகூ.

கண்ணுங் நீரா யுயிரும் மொழுகக் கழியா நின்றேன்
எண்ணுங் நீர்நான் மறையோ ரெரிமுன் னின்மேற் சொரிய
மண்ணுங் நீராய் வந்த புனலை மகனே வினையேற்
குண்ணுங் நீரா யுதவி யுயர்கா னடைவா யென்றான்.

சிந்தாமணி-பதுமை-அஎ.

மலரணி மணிக்குட மண்ணு நீரொடு
பலர்நலம் பழிச்சுபு பரவ வேகினு
னலர்கதிர் கரும்பினை மடுப்ப வாய்கக
குலகளந் தானெனி வுள்புக் கானரோ.

சிந்தா-பதுமை-௧௮௦.

மழைமுகிற் றெருத்திற் றந்த மணிக்குட மண்ணுநீரா
லழகனை மண்ணுப் பெய்தாங் கருங்கடிக் கொந்தகோலந்
தொழுதகத் தோன்றச் செய்தார் தூமணிப் பாவையன்னார்
விழுமணிக் கொடிய னாளும் விண்ணவர் மடந்தை யொத்தாள்.

சிலப்பதிகாரம்.

௧௬௫-௧௬௯. வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை
மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென
மானமர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து
நகர நம்பியர் திருதரு மறுகிற்
பகர்வனர் போல்வதோர் பான்மையி னிறுத்த

இராமா-பால-உண்டாட்டு-௨௬.

மானமர் நோக்கியோர் மதலை வேந்தன்பால்
ஆனதன் பாங்கிய ராயி னாரெலாம்
பேர்னவர் போனவர் தொடரப் போக்கினாள்
தானுமங் கவர்பினே தமிய ளேகினாள்.

சிலப்பதிகாரம்.

௧௭௨-௧௭௪. மாதவி தன்னொ, டணைவுறு வைகலி
னயர்ந்தனன் மயங்கி,
விடுத லறியா விருப்பின னாயினன்.*

இராமா-ஆரணி-அகத்தி-௨௩.

வைகும் வைகலின் மாதவன் மைந்தன்பால்
செய்கை யாவையுஞ் செய்திவட் செல்வநீ
எய்த யான்செய்த தெத்தவ மென்றனன்
ஐயனும் மவற் கன்பினன் கூறுவான்.

ஸ்ரீ. சதாசிவம் பிள்ளை,
நாகை நீலலோசனிப் பத்திராதிபர்.

---

ஸ்ரீ

# ஸ்ரீமத் கம்பராமாயணம்

## சு. யுத்தகாண்டம்

### இயமப்படலம்.

---

கல்வியிற் பெரியரெனக் கவிஞர் புகழும் கம்பநாட்டாழ்வாரால் செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளாற் சீரிய கூரிய தீஞ்சொலால் விருத்தக் கவியாக வருளிச்செய்யப்பட்ட விதிகாசமகிய "இராமாயணம்" என்னும் நூல் பலராலும் ஏட்டுப் பிரதிகளினின்றுஞ் சீர்தூக்கி யச்சிடப்பட்டு நிலவிவருகின்றது. அதனுள் அப்புலவர் பெருமானுடன் சமகாலத்தவரான ஒட்டக்கூத்தப் புலவரானருளிச்செய்யப் பட் டதனுடன் கூடி யுலவும் உத்தரகாண்டத்து அசுவமேதயாகப் படலத்துள் இ ராமசரித கானஞ்செய்யுமிடத்து கும்பகருணன் பொருதுழி,

"வியந்து விடணனைமுத்தலும் வெய்யவன்மறுத்து
வயந்தனைப்பிசைக் தருக்கன் மாமகனைக்கொண்டகன்றான்
..................................................................
..................................................................அசுவ-உஉஅ.

எனவும்; இலங்கையினின்றும் வினைத்திறமுற்றி மீள்வான்

"ஏறிட, விமானந் தன்னி லியாவரு மிறைவி தானும்
மாறின வயந்தன்சேனை நின்றது மலரவன் பாற்
கூறின னனுமன் வாங்கிக் கொண்டபின்..........
.........................................................." ஷை உ௫௬

எனவும் வருகின்ற பாடல்களை நோக்குங்கால் வயந்தன் என்னுந் தானைத் தலைவனைக் கும்பகருணன் வஸ்தித்ததாகவும், அவனைப் பின்னர் உயிரளிக்கப்பட்டுக் கொணர்ந்ததாகவும் கருதப்படுகின்றதனை நோக்கிக், கும்பகருணப்படலத்தும் மீட்சிப்படலத்தும் கம்பநாடர் கூறியதாக அன்னோனது வரலாறு குறிக்குங் கவிகள் புலப்படாது போயினமையின், எனதில்லத்துள்ள பழைய ஏட்டுப்பிரதிகளிற்காணப் படுகின்றனவா வெனத்துருவ, அச்சுப் பிரதிகளுக்கும் ஏட்டுப்பிரதிக

ளுக்கும் படல வேறுபாடுகளே பலவுளதாதலன்றிச் செய்யுட்களும் ஆங்காங்கு மிகை குறைகளாகக் காணப்பட்டமையின் அவற்றை நிறுத்தி மீண்டெடுத்துக் காட்டிய சரிதத்துக்கேற்புடைத்தா மிடத்தை நோக்கக், கும்பகருணன் வதைப்படலத்துக்காணுது மீட்சிப்படலத் துக்குமேல் [அச்சுப்புத்தகம்-மீட்சிப்படலம்-கசநஞ செய்யுள் முதல்] இயமப்படலம் ஒன்று காணப்பட்டது. அதனுள் மேற்கண்ட உத்தர காண்டத்துச் செய்யுட்களோடொத்த சரிதந் தெள்ளிதாகப் புலப்பட் டமையின் அதனை இச் செந்தமிழ் வாயிலாக வெளியிடலானேன். ஏட்டுப்பிரதியுட்கண்ட செய்யுட்கள் அதனினுள்ளபடியே பொறிக்கப் பட்டன.

## மீட்சிப்படலம்

வாங்கி னுனது மாநிதி யோடவண் விமானம்
ஏங்கு வெள்ளமோ ரெழுபது மேறினு லின்னு
மாங்குளோரெலா மேறுவ ததனைநீயேறிப்
பூங் குலாநகர் புகுதியிப் பொழுதினி லென்றான். கசஙந.

என்று தேரினை வீடண னெய்திய தென்று
னன்று தானென நாயக னேறின னவரோ
டொன்று தானிளங் கோவொடு மக்கவிவெள்ள
மொன்று தானென வொருதிசை யிருந்தது மொக்கும். கசஙச.

முற்றும்.

## இயமப்படலம்.

ஏறினன் விமானந்தன்னி லிராமனு மிளையகோவு
மாறிலாச் சனகியோடு வளநக ரிலங்கைவேந்துங்
கூறிய வனுமன் சாம்பன் குமரன்வெங் கவிவந்தேற
மாறிலோர் நிலத்து நின்றார் வயந்தனார் கொத்திலுள்ளார். க

மாறதாய் வெள்ளஞ்சேனை மானத்தின் வராமைநோக்கி
யேறுநீர் தேரிலென்னக் கருணன்வந் தெதிர்த்தபோது
சீறிய நுமரி லெங்கோன் றாக்கிட வரக்கன் சீறி
நீறெழப் பிசைந்தேயிட்டா னெற்றியி லென்னச்சொன்னார். உ

வேறு

என்ற வாசகங் கேட்டலும் வானர ரிறங்கி
நின்ற போதினி லிராகவன் றேரினின் றிழிந்தான்
பொன்று மாவரக் காரண மென்னெனப் புழுங்கா
துன்று தார்ப்புயத் திலக்குவ பொறி யெனச்சொன்னான். ௩

வேறு

வரிசிலை யிராமனோலை மறம்புரி மறலிகாண்க
வெரிகொளு மிலங்கைப்போரி லின்னுயிர் துறந்துபோந்த
குரிசிலை வயந்தன் றன்னைத் தேடியே கொணர்வ தன்றே
லுரியதன் குலமும் வாழ்வு மொழிப்பனென் றெழுதிவிட்டான்.

அக்கணத் தருகுநின்ற வனுமன்கைத் திருமுகத்தைத்
தக்கவ னீட்டவாங்கித் தன்றலை மிசையிற் சூடி
யிக்கணம் வருவன் வாழி யிராமவென் றிருதோள்கொட்டி
மிக்கமா மடங்கல்போல விண்ணிடை விசைத்துப்பாய்ந்தான். ரு

வேறு

மண்டிப் புக்கனன் மறலிதன் பெரும்பதி நரகிற்
றண்டிப் புண்டறப் புண்டெரிப் புண்டவர் தன்னைக்
கண்டு மாருதி கண்புதைத் தரியரி யென்ன
மிண்டி யேறினர் நரகிடை வீழ்ந்தவரெல்லாம். சு

துளங்கி யந்தகன் வந்தடி தொழுதலுந் தேரான்
வளங்கொள் மாருதி வயந்தனைக் காட்டென வவனு
முளங் கலங்கியுன் னுயக னடியரிங் குறூர்கள்
விளைந்த கீர்த்தியாய் தேடுவின் னவர் புரத்தென்றார். எ

சொன்ன கூற்றுவன் றன்னைத்தன் வாலிடைத்துவக்கிப்
பொன்னின் கற்பகப் பதியிடைக் கொண்டுபோய்ப் புகலும்
முன்னிற் கண்டுவந் திந்திரன் முனிவெனோ வென்ன
மன்ன வேகுவன் வயந்தனைக் காட்டுதி யென்றான். அ

வல்லரக்கரை மடித்தெமை யெடுத்த மாருதியே
யில்லை யிங்கய னுலகிடை யறிதியென் றிசைப்பச்

சொல்லு மங்கவன் றன்னையும் வானிடைத் துவக்கிப்
பல்லுயிர்த்திறம் படைத்தவ னுலகிடைப் பாய்ந்தான். ௯

சிந்தை தூயனான் முகன்றனை வணங்கவுஞ் சீறி
வந்தகாரிய மேதென வயந்தனைப் பார்த்துச்
சுந்தரத் தடந்தோள்வில்லி யின்றனை யவன்று
னுர்ந்த வின்பதத் துளானெனிற் காட்டென வுரைத்தும். ௰

என்னுடைப்பெரும் பதத்தின்மே லாதிய வெந்தை
தன்னுடைப் பெருஞ் சோதியிற் கேழாய்த் தழைந்து
மின்னு மீடொளி விண்டுவின் பதத்துளான் விறலோய்
அன்னவன் றனைக் கொணருதி யரக்கனைக்கென்றான். ௧௧

என்று நான்முகன் சொல்லவு மியமனிந்திரனை
பொன்றவால்கொடு துவக்கின மொருகுதி கொண்டான்
மின்றிகழ்ந்தொளி விளக்கிடும் விண்டுவின்பதத்திற்
சென்று கண்டுகொண் டிழிந்தனன் றிவசமுகன் பதியில். ௧௨

மலரின் மேலயன் வயந்தற்கு முன்னுரு வழங்கக்
குலவு வாசவன் யமனைவிட் டிருநிலங் குறுகி
யலகில் வீரன்ற னடியிணை யவனொடும் வணங்கிச்
சல முதிர்ந்தவன் படையொடுந் தனன் றடந்தோளான். ௧௩

முற்றும்.

இயமப்படலத்துக்குமேல் படலப் பெயர்கள் வேறு காணப்படு கின்றன. அச்சிட்ட புத்தகத்து மீட்சிப்படலம் ௧௪௩-௪-இ-ங ஆஞ் செய்யுட்கள் மிகை.

இங்ஙனம்

சிதம்பரம்
13—12—19

ந. சந்திரசேகரன்,
கலியமலை.

# பதார்த்ததீபிகை.

## மூற்றொடர்.

### நித்தாநித்த விவரணம்.

உருவமுன் னான்கும் புவியினிற் பாகத்துதிப்பனவாய்
மருவு மநித்தம் பிறவற்றி னித்தமு மாறுதலும்
விரவுமப் பாக விதிதமக் கின்றி விளங்கு நித்தப்
பொருளிடை நித்த மநித்தத் தநித்தம் பொருந்திடுமே.

(இ-ள்.) உருவம் முன் நான்கும் புவியினில் பாகத்து உதிப்பன வாய் அநித்தம் மருவும்—உருவம் முதலிய நான்கு குணங்களும் பிருதிவியின்கண் பாகத்தாலே தோன்றுவனவாய் அநித்தத்தைப் பொருந்தியிருக்கும்—பிறவற்றில் நீர் முதலிய மற்றையவைகளிலே—அப்பாக விதி தமக்கு இன்றி நித்தமும் மாறுதலும் விரவும்—அந்தப் பாகத்தாலே தோன்றும் விதி தமக்கு இல்லாமல் நித்தமும் அநித்தமும் பொருந்தும்—நித்தப் பொருளிடை நித்தம் (பொருந்திடும்) நித்தப் பொருள்களிடத்தே நித்தத்தன்மை பொருந்தி இருக்கும்—அநித்தத்து அநித்தம் பொருந்திடும்—அநித்தப் பொருள்களிடத்தே அநித்தத் தன்மை பொருந்தி யிருக்கும். எ-று.

உருவம் முதலிய நான்குமாவன:—உருவம், இரசம், கந்தம், பரிசம் என்பன. பாகம் நெருப்பு, சூரியன் முதலிய தேயுவின் சையோகம். பாகம் என்பது சமைத்தல் எனவும், உருத்திரிதல் எனவும் பொருள்படும். பாகம் என்பது பச் என்னும் வினைமுதனிலையினின்றுந் தோன்றிய கிருதந்தம். பசி-சமைத்தல். பாகத்துதிப்பனவற்றைப் பாகஜம் என்பர். அரிசி, காய், பழம் முதலிய பிருதிவிகளிலே முன்னிருந்த உருவமும், இரசமும், கந்தமும், பரிசமும் தேயுசம்பந்தத்தாலே அழிதலும், பின்னர் வேறே உருவமும், இரசமும், கந்தமும்,

பரிசமும் தோன்றுதலும் அநுபவத்திற் காணப்படுகின்றன. இங்ஙனம் அழிதல் பற்றியே அவைகளை "அநித்தம் மருவும்" என்றார். ஈண்டுப் பாகம் பரமாணுக்களுக்கேயாம். துவியணுகம் முதலியவற்றிற்கு அன்று பாகம் பரமாணுக்களின் கண்ணேயாகும் என்று பீலுபாக வாதிகளான வைசேடிகர் கூறுவர். பீலுப்பாகவாதிகள்-பீலுவின் கட்பாகம் உண்டாகும் என்று வாதிப்போர். பீலு-பரமாணு, துவியணுகம் முதலிய அவயவிகளிலும் பாகம் உண்டாகும் என்று பிடரபாகவாதிகளான நையாயிகர் கூறுவர். பிடரபாகவாதிகள் பிடரத்தின்கட் பாகம் உண்டாகும் என்றுவாதிப்போர் பிடரம்-குடம் முதலியவற்றின் சிற்றவயவம்.

பிற என்றது நீர், தீ, காற்றுக்களை. நீர் முதலியவைகளிலே தேயு சம்பந்தமுளதாயினும் உருவம் முதலியன வேறுபடுவனவல்ல. இக்காரணத்தாலே அவை நித்தியாநித்தியங்களை அடைகின்றன. நித்தப் பொருள்களிடத்திற் காணப்படும் உருவம் முதலியன நித்தம். நித்தப் பொருள்கள் பரமாணுவடிவங்களாயுள்ள நீர், தீ, காற்று என்பன. அநித்தப்பொருள்களிடத்திற் காணப்படும் உருவம் முதலியன அநித்தமாம். அநித்தப் பொருள்கள் துவியணுகம் முதலியவாயுள்ள நீர், தீ, காற்றுக்கள், உருவம் முதலிய உற்பூத அநுற்பூத பேதங்களாற் பின்னும் இருவகையாகின்றன, உற்பூதம்-வெளிப்பட்டது. அநுற்பூதம்-வெளிப்படாதது. இனிச்சங்கியை கூறப்படுகின்றது.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப் பிள்ளை.

## "நன்னூல்" என்னும்

## இயையில் பெயர்ச் சொற்றொடர் மறுப்பு.

---

யாழ்ப்பாணத்து வண்ணைநகர் வசிப்பவராகிய ஸ்ரீ க. வைத்திய லிங்கம்பிள்ளை அவர்களுடைய கைச்சாத்தோடு "நன்னூல்" என்னும் வியாசம் இச்செந்தமிழில் வந்தது. செந்தமிழபிமானிகள் அனைவரும் அறிவர். அவ்வியாசம் செந்தமிழ் (தொகுதி. ௧௭. பகுதி. ௯.) ௪௪௯-ம் பக்கந்தொட்டு எட்டுப்பக்கநிரம்ப எழுதப்பட்டிருக்கிறது. அவற்றுள் ௪௯௯-ம் பக்கமும் ௪௯௪-ம் பக்கத்திற் பத்துவரிகளுமே நன்னூல் விஷயத்தைக் கொண்டிருக்கின்றன. எஞ்சிய ஏழுபக்கங்களுள் அடங்கிய வரிகளெல்லாம் இராமநாதன் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதி அவர்களின் கூற்றுக்களை அடக்கியிருக்கின்றன. அவை யாவையோவெனில் ஷை பாரதியாரவர்கள் செந்தமிழில் முற்றுப்பெறாது தொடர்பாக நுணுகியாராய்ந் தெழுதிவரும் "தொல்காப்பியரும் பிற்காலத்தாரும்" என்னும் வியாசத்திலே அவர்கள் நன்னூலாரைக் கண்டித்தெழுதியது கூடாது என்றும் எழுத்துப்பிழை சொற்பிழை விரவ எழுதியது குற்றம் என்றும் அப்பாரதியார் மேலெழுந்த கண்டனங்களாம்.

பிள்ளையவர்கள் வியாசம் "நன்னூற்" பெயரொடுதோற்றி நவநீத கிருஷ்ணபாரதியார் அவர்களைக் கண்டித்தலில் வளர்ந்து அறிஞர் அங்கீகாரம் பெறவியலாது நின்றாலும் சிறுபான்மை அவ்வியாசத்தால் உலகமலையாமை காரணமாகவும், பெரும்பான்மை அதனைக் கண்டிக்குமுகத்தானே பேர்பெறக் கருதியும் அதனைக் குறித்து ஈண்டுச்சில கூறத் தொடங்கினேன். பாரதியார் முதலியோர் புகழ்பெறுதல் கருதியே முந்துநூல்களையும் உரைகளையும் கண்டித்தார்களென்று பிள்ளையவர்கள் எடுத்துக்கொண்ட கருத்தின் வண்ணம் பாரதியாரைக் கண்டித்துப் பெற்றபுகழைக்கண்ட யானும் அவ்வழியிலிறங்கிப் பிள்ளை அவர்களைக் கண்டித்தால் அப்புகழ் தப்பாதெய்துதல் ஒருதலையாதலின் இத்துறையில் இறங்கினேன் என்க.

ஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியார் அவர்கள் நூல் உரையாசிரியர்களை மறுத்துத் தங்கொள்கையை நிறுவு மிடங்களிற் பெய்த "மனக்கோட்

டை" "மயங்கவைத்தல்" "இடர்ப்படுவர்" என்பனவாகிய சொற்றொடர்கள் கற்போர் மனம்புடியாவாக வெழுதற்குரியனவாயினும் அவர்கள் எழுதிச்செல்லும் விஷயம் இலக்கணவாராய்ச்சி செய்வார் அனைவர்க்கும் சாலப்பயன் படத்தக்க தொன்றேயாம். நன்னூலார்மேற் குற்ற மேற்றிய பாரதியாரவர்களைத் தம்மனம்போன வாறே கண்டித்து அந்நூலார்மேற் குற்றஞ் சாற்றுது இனியடங்குமாறு அவர்க்காணையிட்டு "இவ்வளவிலமையும்" எனத்தாமே அமைந்து கூறியும் யாழ்ப்பாணத்தில் இனி தலைவிவரும் இந்து சாதனத்திலும் அதனைப் பிரசுரஞ்செய்வித்துச் சிங்கநாதஞ் செய்த பிள்ளையவர்கள் எழுதிய அவ்வியாசத்திலே (க) அநியாயம் (உ) அறியாமை (ங) சபைப்பழக்கமின்மை (ச) நடுவு நிலையின்மை (ரு) மற்றொன்று விரித்தல் முதலிய குற்றங்கள் ஆன்றோர் கையாடற் கேதுவாக விளங்கிக்கிடத்தலை ஒரு சிறிது காட்டுவாம். அவையாவன:—

பாரதியாரவர்கள் தொடர்பாக எழுதிவரும் வியாசத்தைப் பூர்த்தி செய்தபின்னரே கண்டித்தல் முறையாம். அவர்கள் முடிக்குமுன்னரே பிள்ளையவர்களை அதனைக் கண்டித்து அமைந்து கூறியதனால் அநியாயமும், (உ) பிள்ளையவர்கள் எழுதிய வியாசம் பாரதியார் அவர்கள் நன்னூற்குக் கூறிய குற்றங்களையும் குற்றங் கூறிய பாரதியார் அவர்களையும் கண்டிக்கு நோக்கத்தோடு எழுந்தமைக்கேற்ப "நன்னூலும் நவநீத கிருஷ்ணபாரதியாரும்" என்றாவது தாங்கண்டித்தலைப் புலப்படுத்தும் வேறெவ்வகையிலாவது அதற்குப் பெயரிடவேணுமேயன்றி "நன்னூல்" எனத்தாம் இட்டுக்கொண்ட பெயருக்கேற்றவாறு அந்நூலின் குணகுணங்களைக்கூறி அதனை முடிக்கவேண்டும். அங்ஙனம் முடிக்க அறியாதிடர்ப்பட்டதனால் அறியாமையும், (ங) துறவி வித்துவான் முதலிய பெரியோரின் திருநாமங்களை வாளா கூறாது அவ்வவர் நிலைக்கும் தகுதிக்கும் தக்கவாறு ஸ்ரீமத் ஸ்ரீ முதலிய மரியாதைக் குறியிட்டுத்தந்து கூறலே ஆன்றோர் கொள்கையாம். அங்ஙனங் கூறாது "சிவஞானமுனிவர்" "மஹாமஹோபாத்தியாயர் உ. வே. சாமிநாதையரவர்கள்" "ரா. ராகவையங்காரவர்கள்" "திருநாராயணையங்காரவர்கள்" எனப் பெரியார் திருநாமங்களை மரியாதைக்குறியிடில்லாது வழங்கியதாற் சபைப்பழக்கமின்மையும், (ச) தந்நாட்டு வித்துவான்களை "ஸ்ரீல ஸ்ரீ—பெருமான்" "வித்துவசிரோமணி பூலவர்" என முன்னும் பின்

னும் அடைமொழி புணர்த்தி விசேடித்தும் தமக்கயல் காட்டாராகிய ஏனைக்கலைஞர்கட்கு அங்ஙனம் விசேடியாதும் விட்டமையின் நடுவு நிலைமையின்மையும், விரிவஞ்சி விடுக்கப்பட்ட பிறகுற்றங்களுமாம்.

வாதமுறையிற் பிள்ளையவர்கள் வல்லுநராதலின், துறவி வித்துவான் முதலிய பெரியார் திருநாமங்களை அடைபுணர்த்தாது தீட்டியது அன்னார் பெருமை கருதியே எனவும் அங்ஙனங் கூறல் ஆன்றோர் கொள்கையாம் எனவும், இதனாலன்றே அறிவாற் சிவனாகிய மணிவாசகப் பெருந்தகையார் தாம் திருவாய்மலர்ந்தருளிய "திருவளர்தாமரை" என்னுந் திருப்பாட்டில் இழிந்தனவாகிய தாமரை முதலியவற்றிற்கு அடைபுணர்த்தியும் உயர்ந்ததாகிய கோங்கிற் கடைபுணர்த்தாது மோதினர் எனவும், இதனையு மிவர்நோக்கிலர் எனவும் இதற்குரைகண்ட பெரியார் தீட்டிய விசேடக்குறிப்பையுங் கருதிலரெனவும் தீட்டிவெளியிட முற்படுவாராயின், யாமென் செய்வது. பிள்ளையவர்களும் அவர்கணேசரும் இந்நூலுரைகளை நுனித்துணர்ந்தறிந்தே ஸ்ரீமத்—நாவலர் முதலிய புலவர்களை உயர்த்த முன்னும் பின்னும் அடைகொடுத்தாரென வறிகின்றேன். தேசாபிமானம் யாவர்க்குமுளதாவதியல்பே அந்தோபாவம் இது கிடக்க மேற்செல்வாம்.

பிள்ளையவர்கள் "கற்போரினிதுணர்ந்து கொள்ளுமாறு தொகைவகை விரியிற் றரப்பட்டது" எனத்தாம் பொறித்த வசனத்திற்கு எழுவாய் முதலியன காட்டுவார்களாயின், பாரதியாரவர்கள் வரைந்த வசனங்களிலும் அவற்றை எளிதிற்கண்டு கொள்வார்கள். ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற் றீதுண்டோ மன்னுமுயிர்க்கு" என்ற பெருநாவலர் வாக்கையுஞ் சிந்திப்பாராக.

இனி "நன்னூல்" என்பது ............பவணந்தி என்னு நாமத் திருந்தவத் தோனாலே......செய்யப்பட்டதோரிலக்கண நூல்" "தமிழ்ப் பதங்களைப்.........தென்மொழியிலக்கண நூலுணர்ச்சியோடு தமது வடமொழியிலக்கண நூலுணர்ச்சியுங்கொண்டு பவணந்தியார் பதவியற்கண் அமைத்த புதுவிதிகளும் நன்னூல் வாய்ந்தது" என்று பிள்ளையவர்கள் கூறிய இவ்வசனங்கள் இரண்டனுள்ளே முன்னதினால் நன்னூலையியற்றியவர் பவணந்திமுனிவர் என்பது பெறப்பட்டது. பின்னதில் பவணந்தியார் பதவியற்கண் அமைத்தனவே புதுவிதிகளாக

ஏனைய பழையனவா? பவணந்தியார் புதுவிதிகளைப் பதவியற்கண் அன்றி வேறிடங்களில் அமைத்திலரா? "நன்னூல் என்பது......... பவணந்தி என்னும் நாமத்திருந்தவத் தோனாலே செய்யப்பட்டதோ ரிலக்கண நூல்" என்று கூறிப் "பவணந்தியார் பதவியற்கண் அமைத்த புதுவிதிகளும் தன்னுள் வாய்ந்தது" என்று பின்னும் பவணந்தியார் என்றக்கால் அது கூறியது கூறலன்றோ? மேற்போந்த வசனங்களுள்ளே மயக்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தல், நின்றுபயனின்மை முதலிய குற்றங்கள் பொலிந்துகிடக்கின்றனவே.

இனிப்பிள்ளையவர்கள் வடமொழி இலக்கண நூலுணர்ச்சி (பவணந்தியார்) தமதென்கின்றார்கள். "தென்மொழி இலக்கண நூலுணர்ச்சி எவருணர்ச்சியோவறியோம். நன்று! நன்று!! "பாரதியாரவர்கள் தாமெழுதிய விஷயத்தைப் பிழையற வெழுது மாற்றலில்லாதவர்களாக விருக்கின்றார்கள்" எனச்சிறிதும் கூசாதெழுதிப்போந்த பிள்ளையவர்கள் எழுத்துவன்மை அறிஞர்கள் கண்டு இறும்பூதெய்தற் கேதுவாவதுவேயாம்.

தாம் "நன்னூல் என்பது" என்று தொடங்கிப் பன்னிரண்டு வரிக்குள் நன்னூலைப்பற்றி எழுதிவிட்டு, 'இத்துணை பெருமைவாய்ந்த' எனக்கூறிய பிள்ளையவர்கள், "மெய்யோடியையினு முயிரியறிரியா" என்ற சூத்திரத்திற்குப் பன்னீருயிர்களும் எனத்தொடங்க ௨௧-வரிகள் வரை இயற்றிரிதலைப்பற்றி எழுதி அதன்பின் இக்காரணங்களால் எனக்கூறிப்புகுந்த பாரதியாரவர்களை "முன்காரணங்களைத் தெரிக்காது இக்காரணங்களால் என்றதும் வழூஉ" எனக்கண்டித்தமை தவப்பெருவியப்பே.

இனி இலக்கணக் கொத்துநூலாரும் "முன்னோரொழியப் பின்னோர் பலரினுள் நன்னூலாருக் கெந்நூலாருமிணையோவென்னுந் துணிவே மன்னுக" எனப் பவணந்தியாரைப் புகழும் வாயாற் புகழ்ந்தனர் என்றும், "நன்னூலாரைப் புகழ்ந்தாரையன்றி யிகழ்ந்தாரை நாம் இற்றைவரை" வாசித்து அறியோம் என்றும் கூறினார்கள். இலக்கணக் கொத்துநூலார் தந்நூல்-எம்-சூத்திரவுரையில் "நன்னூல் சின்னூல் அகப்பொருள் காரிகை அலங்கார முதலிய இலக்கணங்களையும்...... .........ஓர் பொருளாக எண்ணிவாணாள் வீணாள் கழிப்பர்" என நன்னூலை இகழ்ந்து கூறி, கல்விமுதலிய வற்றுற்றம்பி னுயர்த்திவிட்டனரே

யென்னும் அழுக்காறு காரணமாகக்கொண்ட பழம் பகை சாதித்து இலக்கண விளக்கநூலுடையாரைத் தாழ்த்தல் கருதி 8-ம் சூத்திர வுரையில் நன்னூலாரை வஞ்சத்திற்புகழ்ந்தனரேயன்றி வேறில்லை. இதனை அவ்வனம் இலக்கணக்கொத்து நூலாசிரியர் தாமே தமது நூற் குரையியற்றியதற்கு மேற்கோளாக" என் கண் காணத் திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்கிய வைத்தியநாதனிலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன்" என இலக்கண விளக்க நூலாரைப்பிள்ளை யவர்கள் கூறி யாங்கும் புகழும் வாயாற் புகழ்ந்திருத்தலால் இனிதறிந் தடங்குவாராக. இலக்கணக்கொத்து நூலார் நன்னூலார் என்றதன்றி அந்நூலாசிரியரைப் பவணந்தி என மறந்தும் கூறாமையான் அப்புகழ் காரணங்கருதிய வஞ்சம் மலிபுகழேயன்றி நெஞ்சமகிழ் புகழன்றென் பது நடுவுடையார் பலர்க்கும் வெள்ளிடை மலைபோல் விளங்குமென் பதிலையமின்றாம். இலக்கணக்கொத்து நூலார் நன்னூலாரை இகழ்ந் ததும் இலக்கண விளக்கநூலாரைப் புகழ்ந்ததும் முன்னதாகிய 7-ம் சூத்திரவுரைக் கண்ணும், பின்னதாகிய 8-ம் சூத்திரவுரைக்கண்ணும் காணப்படலால் பின்னதின் முன்னது வலியுடைத்தென்னு நியாயம் பற்றி நன்னூல் இலக்கணக்கொத்து நூலாரால் இகழ்ந்தொதுக்கப்பட்ட தோர் நூலாமென்பது அதனை நுனித்துணர்ந்து கற்றவறிஞர் பலர்க் கும் பொள்ளெனப் புலனாம். இனி அவ்விலக்கணக்கொத்து நூலார் அந்நூல் 8-ம் சூத்திரவுரையில் "அ இ உம் முதற்றனிவரிற் சுட்டே" என்புழி எனத்தொடங்கி.........நன்னூலார்க்குப் பின்னூலார் இச் சூத்திரத்திற்கு அளவிறந்த குற்றம் கூறினரென்று நன்னூலை யிகழ்ந் தாரிவரென வெள்ளிடை விலங்கல்போல விளக்கியருளினர். இஃ தன்றி, ஆசிரியர் சிவஞானயோகிகள் "போலியெழுத்தென வொன் றில்லை" யெனவும், ஐகாரம் மொழிமுதற் கட்குறுகாதெனவும், ஔ காரக் குறுக்கமென் றொன்றில்லை யெனவுங் "கூறி" அம்முன்னிகரம் "என்னும், நன்னூற் சூத்திரத்தைக் கண்டிக்கவெழுந்து பல்கலைக் குரி சில் பவணந்தியென" முன்னர்ப்புகழ்ந்தமையை முன்னி, அச்சூத்திரத் தில் இறுதியிற் சில சொற் பெய்து முடித்த இலக்கணவிளக்க நூலாசிரி யர் தலையில் தம்மாதீனத்தார்க்குரிய பழம் பகைகாரணமாக அவ்வழு வை யேற்றினார்கள். இதனை இலக்குவாகப்பிள்ளையவர்களும் அவர் கணேசரும் ஆராய்ந்து அறிந்துகொள்ளலாம், இது தேரும் மதுகை யின்றி நன்னூலார் மேற்குற்றமேற்றியது பாரதியவர்களின் ஆராய்ச்சி

பின்மையே எனக்கூறிப்போந்த பிள்ளையவர்கள் நூல்களிற் கூர்ந்து அழிவின்றி செல்லும் ஆராய்ச்சிவன்மை யாவராலும் போற்றற்பால தேயாம். இனி ஆராய்ச்சி வல்லுநரான பிள்ளையவர்கள் இலக்கணக் கொத்து 7-ம் சூத்திரவுரையில் அந்நூலார் நன்னூலை யிகழ்ந்ததும் 8ம் சூத்திரவுரையின் முற்பகுதியில் நன்னூலாரைக் கண்டித்தாரைக் காட்டியதும் பிற்பகுதியில் நன்னூலாரைப் புகழ்ந்ததும் பிறவும் உளவாகப் பின்னதாகிய புகழ்ச்சியைக் கண்ணுற்று முன்னையவாகிய இகழ்ச்சியையுங் கண்டனத்தையும் கண்ணுறாது "நன்னூலாரை யிகழ்ந்தாரை நாமிற்றைவரை படித்தறியோம் எனக்கூறியது அவர்கள் ஆராய்ச்சி வன்மையை இனிது விளக்கிக்காட்டுகின்றது. இம்மட்டோ!! தொல்காப்பியர்க்கும் நன்னூலார்க்கும் அது கருத்தன்மையின்" என்றும் "இளம்பூரணரும்........என்றது உம் இக்கருத்து நோக்கியே" என்றும் கூறிப்போதலின், பிள்ளையவர்கள் ஆசிரியர் கருத்தினை யறியுமாற்றல் பெரிதுடையார் போலும். அது பற்றியன்றே இலக்கண விளக்கநூலாரும் இதனையங்கீகரித்து இதன்கணுள்ள சூத்திரங்களையே தந்நூலிற் பெரும்பாலும் பொருத்தி யாத்தனர் என இலக்கண விளக்கநூலார் கருத்தும் இற்றென மொழிந்தனர். இலக்கண விளக்கப்பதிப்புரையைப் பிள்ளையவர்கள் வாசித்திருப்பின் இங்ஙனந் தீட்டியிரார். இலக்கண விளக்கப்பதிப்பாசிரியராகிய ராவ்பகதூர் ஸ்ரீசி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் அந்நூற் பதிப்புரையிலே அந்நூலாசிரியரைப்பற்றிக் கூறுமிடத்து முதலில் இவர் நன்னூற்குச் சைவ முனிவருரை தக்கவுரையல்லவென்று கண்டு தாமோருரை யெழுதுவாராயினார். பின்னர் அதிற் பலஇடங்களில் நன்னூலாரோடு தம்மதம் மாறுபட்டமையால் இந்நூல் இயற்றத் தொடங்கினர் என நூலியற்றற் கிருந்த காரணத்தையும், "சூத்திரங்களைப் படைப்பண்ணும்போர் ஒருபொருளிற் பலசூத்திரங்களைப் பாடுஞ்செய்தல் வீண்காலக்கழிவென்று கருதி இலக்கணாசிரியர்கள் பழஞ்சூத்திரங்களையே' தமக்கு வேண்டிய விகற்பத்தோடு எடுத்தாளுதல் பெருவழக்காதலின் இந்நூலாரும் பெரும்பாலும் கற்போர்க்கு உபகாரமாக நன்னூல் முதலிய நூல்களின் சூத்திரமுதலியவற்றைத் தழுவியெடுத்தும் சிலவற்றை முற்றுங்கொண்டும் தொல்காப்பியச் சூத்திரம் பலகொண்டும் சூத்திரஞ் செய்யாமைக்குற்ற காரணத்தையும் கூறினார்களாதலின் பிள்ளையவர்கள் கூறியாங்கு இதன்பெருமை கருதி யாத்தனரல்ல வென்பது அறிஞர் பலர்க்கும் விளங்குமென்பதிலொரு

சிறிதுமுட்டின்றும். இலக்கண விளக்க நூலிலே அந்நூலைப் பெரும்பான்மையாகக் கண்டித்துச் சென்றதாலும், இலக்கணக்கொத்து நூலாரும் ஸ்ரீ.சிவஞான சுவாமிகளும் இலக்கண விளக்க நூலார் தனி கண்டித்தாரென்னும் கருத்தமைய எழுதியவசனங்கள் ஆண்டாண்டு நின்றுசான்று பகர்தலானும், நன்னூலார் கொள்கையை இலக்கண விளக்கநூலார்பெரிதுங்கண்டித்துச் சென்றனரென்பதைப் பிள்ளையவர்கள் நனித்துணர்ந்தறிவாராக. பாரதியவர்களெழுதிய வசனங்களில் வந்த எச்சங்கள் முற்றுக்கள் தொகை நிலைகள் அவாய் நிலைகள்முதலிய வற்றைக்கண்டு பொருளறிதற்குரிய அத்துணை இலக்கண ஞானமில்லாமையினாலே தமக்கு விளங்காதன வெல்லாம் வழூஉ வெனக் கொண்டோ இலக்கணவிஷயமாகிய சாரத்தை நழுவவிட்டு எழுத்துப்பிழைக் குப்பையைப்பற்றி கொண்டபிள்ளையவர்கள் தங்காட்டுப் புலவர்களுள் தலைசிறந்து விளங்கிய ஸ்ரீமத் ஆறுமுகநாவலரவர்கள் பலவாறு திருத்திப் புதுக்கிச் செப்பஞ் செய்து பதிப்பித்த நன்னூற் காண்டிகையுரை 155-ம் பக்கத்து "ஏழாம் வேற்றுமை யிடப்பொருளுணர நின்ற அன்று, இன்று முதலிய மென்றொடர்க் குற்றியலுகரவீற்று மொழிகளின் முன் வரும் வல்லினம் அன்று கண்டபின்" என இயல்பாய் முடியும் எனவும், காலஞ்சென்ற வித்வான் ஸ்ரீமத் விசாகப்பெருமாளையரவர்கள் அரிய பெரிய ஆராய்ச்சி செய்தெழுதிய இலக்கணச் சுருக்கத்தை விரித்துச் சுருக்கிப் புதுக்கி ஐயரவர்கள் இட்ட பெயரோடு பதிப்பித்த இலக்கணச் சுருக்கம் 55-ம் பக்கத்து "ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணர நின்ற அன்று, இன்று முதலிய இடைச் சொற்களின் முன் வரும் வல்லினம் மிகா" எனவும் வரைந்திருத்தலான் அன்று, இன்று முதலிய சொற்கள் காலப்பொருளுணர நிற்பன சிற்றிலக்கணங்கற்ற சிறு மகாரும் எளிதிலுணர்வரே. இதனை இந்நாவலரெனப் பெயர் புனைந்த இவரறிய மதுகையிலராயினரே; ஆதலால் இவர்க்கு இலக்கண ஞானஞ்சிறிதுமிலலையென வொருகண்டனந்தீட்டிப் பிள்ளையவர்கணேசரும், பிள்ளையவர்களும் வெளியிடாதது அந்நாவலரும், அந்நாட்டுப் புலவர்களுஞ் செய்த தவப்பயனேயாம். இக்காலத்து யாழ்ப்பாணத்துப் புலவரெனப் பெயர் படைத்து விளங்கும் ஸ்ரீ கணேசையர் முதலியோர்க்கு இயற்றமிழாசிரியராகிய சுன்னாகம் ஸ்ரீமத் அ. குமாரசாமிப்புலவரவர்கள் தாம் குறிப்புரை வரைந்து பதிப்பித்த சகலைசச்சிலேடை வெண்பாவில் மறந்தியானேர்ந்த வழூஉக்கள் பலவுள்ளன அவற்றுளொன்றை யீண்டுத் தருகின்றேன். "இருதாட் செங்கழுநீர்ப்போதகம்=

இரண்டு தாள்களாகிய செங்கழுநீர்ப்பூவையுமுடைய யானையாங்க விநாயகர்" எனவுரைத்துள்ளார்கள். "செங்கழுநீர்ப்போதகம்" செங்கழுநீர்வி நாயகர் எனப்பொருள் கொள்ளல் வேண்டும். அக்கலைசையிற் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் மூத்தபிள்ளையார்க்கு இது திருப்பெயராதலின் இங்ஙனமாய வழூஉக்களெல்லாம் எழுத்துக்களைக் கோவை செய்பவராலும்; எழுதுவோராலும் நேர்ந்தனவென்பது அறிஞர் பலரும் அறிவர். பிள்ளையவர்களும் அவர்சணேசரும், இவ்விருவர் பதிப்பித்த புத்தகங்களை யெல்லாம் வாசியாரென வறிகின்றேன். வாசிப்பின் இங்ஙனமாய வழூஉக்கள் பலதெற்றென விளங்கும் அவையெல்லாந்திரட்டி யொருகண்டனந்தீட்டின் எழுத்தில் பெரும்புகழ் பெறலாமே. ஸ்ரீ நவநீத கிருஷ்ண பாரதியாரவர்கள் இலக்கணவாராய்ச்சிப் பிரியர் பலர்க்கும் கனிபயனளிக்கவல்ல அரிய விஷயங்களை நுணுகியறியவல்ல ஆற்றலுடையவரெனினும் அவற்றை யெழுதுவதிற் சோம்பலும் பெரிதுடையரென்பது அவர்களெழுதிய வியாசத்தில் வந்த எழுத்துப்பிழைகளால் அறியலாம். அன்றியும் தமது வியாசத்திற் றோன்றிய பிழைகளைத் திருத்திச் செந்தமிழ் வாயிலாகப் பிரசுரித்ததுவும் தக்கசான்று பகரும். பெரும் வியாசங்களெழுதும்பொழுது இவ்விதப் பிழைகள் யார்க்கும் வருதலுண்டு. அறிஞர் அப்பிழையை மதியார் எனினும் அப்பிழைதானும் வாராவண்ணம் எழுதலே நன்று. எழுத்தாளரால் எழுதப்படுவவேயாயினும் அவ்வியாசங்களைத் தாம் பரிசோதித்துப் பிரசுரத்திற் கனுப்பல்வேண்டும். ' அங்ஙனஞ் செய்யாதது பாரதியவர்கள் குறையே; நிற்க. பிள்ளையவர்கள் பாரதியவர்களிற் கண்டவழூஉக்களிற் செல்வாம். "ஆசிரியர் என்றனர். இங்கே ஆசிரியர் இன்னார் எனத் தெரித்துக் கூறாமையும் வழூஉ" வென்பது பிள்ளையவர்கள் செய்த கண்டனங்களுள் இரண்டாவது பாரதியவர்கள் "தொல்காப்பியரும் பிற்காலத்தாரும்" எனப் பெயர் தந்து எழுதிய வியாசத்திற்கேற்ப எட்டுவரிகொண்ட சொற்றொடர்களாற் பீடிகையிட்டு" ஆசிரியர் "எழுத்தெனப்படுப" என்னுஞ் சூத்திரத்தால் எனத் தொடங்கிய முதல் வசனத்தின் முதற்சொல்லாகிய "ஆசிரியர்" என்பதே இப்பிள்ளையவர்கள் காட்டிய ஆசிரியராவார். வியாசத்தின் பெயரே தொல்காப்பியம் என முதனிலுள்ளதாகவும் "எழுத்தெனப்படுப" என்னுஞ் சூத்திரஞ் செய்தார் தொல்காப்பியரன்றி வேறெவருமிலராகவும் அத்தலைச் சூத்திரஞ்செய்தாரிவர் என்பது தொல்காப்பியம் பயிலா

தாரும் அறியத்தக்க தொன்றாயிருப்பவும், அச்சூத்திரஞ்செய்த ஆசிரியர் பாவமிரன அறியுமாற்றல் தமக்கின்றித் தமதறியாமையைப் பாரதியாரவர்கள் மேலேற்றிய பிள்ளையவர்கள் ஆராய்ச்சி வியக்கற்பாலதே.

“ஒருவரைக் கண்டனஞ்செய்வார் அவரினும் அறிவாற்றல்களான் மேம்பட்டவராயன்றோ விருத்தல்வேண்டும்” என்றதமது வசனத்தை இவ்விடத்திற் பிள்ளையவர்களும் அவர்கணேசரும் சிந்தித்தல் நன்று, என்னை? “அறத்காறிதுவென வெள்ளைக்கிழிபு” என்றவிடத்து அறத்தாறிதுவென்னு முதற்குறிப்புச் சொல்லையுடையது திருக்குறட்செய்யுள் என்றும் அதன் ஆசிரியர் திருவள்ளுவர் என்றும் அறியாதானைத் திருக்குறள் வல்லுநன் என்று சொல்லுவ தொல்லாதவாறேபோல் “எழுத்தெனப்படுப” என்னுஞ் சூத்திரஞ்செய்த ஆசிரியரை அறியாத பிள்ளையவர்களையும் அவர்கணேசரையும் தொல்காப்பியங் கற்றவரென்று சொல்லுவதும் ஒல்லாதென்க.

(தொடரும்)

இங்ஙனம்.

R. R. GUNARATNAM, B. A,
(Tellippalai Jaffna.)

---

# 13-வது புறப்பாட்டும் உரையும்-III.

௧. இதுகாறும் ‘விழுநீர் வேலிநாடுகிழவோனே’ என்னும் அடியொன்றின் துணைகொண்டு ‘நாடுகிழவோன்’ என்றது சேரனைக் குறிப்பதாகுமெனக்காட்டுதற்கு நண்பரவர்கள் முயன்றார்கள். இனி நாட்டிற்குக் கொடுக்கப்பட்டுள்ள அடைமொழியின் பொருளாற்றலால் அந்நாடு சேரனுக்கே யுரியதாதல் பெறப்படுமென்று அவர்கள் கூறுகின்றார்கள். அடைமொழி வருமாறு:—

‘பழனமஞ்ஞையுகுத்தபீலி
கழனியுழவர்சூட்டொடுதொகுக்குங்
கொழுமீன்விளைந்தகள்ளின்
விழுநீர்வேலிநாடு’

இதன்பொருள்: 'வயலிடத்து மயிலுதிர்த்த பீலியை ஆண்டுள்ள உழவர் நெற்சூட்டுடனே திரட்டும் கொழுவிய மீனையும் விளைந்தகள்ளையுமுடைய மிக்கநீராகிய வேலியையுடையநாடு' என்பது. இவ்வாறு 'விழுநீர்வேலிநாடு' விசேடிக்கப்படுதலான், "அந்நாடு மயிலினங்களையுடைய மலைகளையடுத்துள்ள மருதநிலமுடையதென்றும், அங்கு மயிலிறகு தொகுக்குந் தொழினிகழ்ச்சியுண்டென்று"ங்கருதி, -"இவ்விலக்கணங்களையுடையது சோணாடாகாது சேரநாடேயாம்" என்றொருதலையாய்த் துணிகின்றார்கள். ஈண்டு 'மலைகளையடுத்துள்ள மருத நிலமுடையது' என்று நண்பரவர்களாற் பொதுப்படக் கூறப்படினும், அக்கூற்றிற்கு ஆதாரமாக அவர்கள்கொண்டது மஞ்ஞைகள் பழனங்களில் (வந்தலைப்) பீலியுகுப்பனவென்று செய்யுளிற் காணப்படுவதேயாம். இதனாற் பழனங்களையடுத்து மயில்கள் உளவாதல் பெறப்படும். இவ்வாறுளதாகச் சோணாடு கூறப்படுகிறதாவென்ற விஷயமே யாமிங்கு ஆராய்தற்குரியது.

சோழதேசத்துத் திருப்பதிகள் பலவும் கதிர்மிகு செந்நெல்வயல்களோடு மயில்குலவு நளிர் சோலைகளுடையனவா மென்று 'தேவாரம்' 'நாலாயிரம்' முதலிய அருளிச்செயல்கள் உணர்த்துகின்றன. உதாரணமாகச் சிலமேற்கோள் தருகின்றேன்.

1. 'சேலடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்'
'மீசடைந்த தோகையாட விரைகமழும்பொழில்...சேய்ஞலூர்'

2. 'செறியிதழ்த்தாமரைத்தவிசிற்றிகழ்ந்தோங்கு விலைக்குடைக்கீழ்ச்
செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரையிரட்ட இளவன்னம் வீற்றிருக்கும்மிழலை'
'வரைச்சேருமுகின்முழவ மயில்கள் பலநடமாட வண்டுபாட
விரைச்சேர் பொன்னிதழிதரமென்காந்தள்கையேற்கு மிழலை'

3. 'பைந்தாமரைகள் கழனிசூழ்ந்தபழனநகர்'
'கலவமயிலுங் குயிலும் பயிலும்......பழனநகர்'

4. 'காலாடுநீலமலர் துன்றிநின்ற கதிரேறு செந்நெல்வயலிற்
சேலோடுவாளை குதிகொள்ளமல்கு திருமுல்லைவாயில்'
'மானேறுகொல்லை மயிலேசிவந்து குயிலேறுசோலைமருவித்
தேனேறு மாவின்வளமேறியாடுந் திருமுல்லைவாயில்'

என்பனபோன்ற சம்பந்தப் பெருந்தகையருண் மொழிகளையும்,

*1. 'கானாட மஞ்ஞைக்கணமாட மாடே
கயலாடுகானீர்ப்பழனம் புடைபோய்த்
தேனாடமாடக்கொடியாடுதில்லைத்
திருச்சித்ரகூடம்'

2. 'செந்நெற் கூழைவரம் பொரீஇ அரிவார் முகத்தெழுவாளைபோய்க்
கரும் பகற்காடணையும் அணியாலி'
'சோலைத்தலைக் கணமாமயில் நடமாடமழைமுகில்போன்றெழுந்
தெங்கு மாலைப்புகைகமழும் அணியாலி'

3. 'எண்டிசையும் பெருஞ்செந்நெலிளந்தெங்குகதலி
யிலைக்கொடியொண்குலைக்கமுகொடுகலிவளஞ்சொரிய
வண்டு பலவிசைபாட மயிலாடு நாங்கூர்
வைகுந்த விண்ணகரம்'

4. 'செந்நெல்மலிகதிர்க்கவரிவீசச்சங்கம்
அலைவுமுரலச்செங்கமலமலரையேறி
வன்னமலிபெடையோடுமமருஞ்செல்வத்
தணியழுந்தூர்'
'புலம்புசிறைவண் டொலிப்பப்பூகந்தொக்க
பொழில்கள்தொறுங்குயில்கூவ மயில்களால
அலம்பு திரைப்புனல்புடைசூழ்ந்தழகார்செல்வத்
தணியழுந்தூர்'

என்பனபோன்ற திருமங்கைமன்னர் திருவாக்குகளையும் நோக்கிக் கொள்க. இங்ஙனமாகச் சோணாட்டுத் திருப்பதிகள் பலவற்றின் இயற்கை வளங்கள் எடுத்துச் சொல்லப்படுதலினாலே, அந்நாட்டின்கண், வயல்களையடுத்து மயில்களுளவாதல் அறியத்தகும்.

தேவாரமுதலியனவேயன்றியும், சங்ககால நூல்களும் மேற்காட்டிய வுண்மைக்குச்சான்று பகர்கின்றன. பொருநராற்றுப்படையின் கண்ணே கரிகாற்பெருவளவனது காவிரிபுரக்கும் நாடுவருணிக்கப்படுகின்றது. ஆண்டு 'முடக்காஞ்சிச் செம்மருதின் மடக்கண்ணமயிலால'

* இந்நான்கு மேற்கோள்களும் எனது நண்பர் ஸ்ரீதேசிகவிநாயகம்பிள்ளையவர்களாலுதவப்பட்டன.

என்னும் இரண்டடிகள் உலவாதல் கற்றோர்பலருமறிவர். உரைவகுத்த நச்சினார்க்கினியர் 'பாகற்பழத்தையும்......பலாப்பழத்தையும் தின்று காஞ்சிமரத்திலும் செவ்விய மருதிலுமிருந்த......பெடைமயில்கள் ஆரவாரித்தழைக்கும்படி' என்றுபொருள் கூறினர். இதனால் மருதநிலத்தே மயிற்பெடைகள் தங்கியிருந்தமை யுணரப்படுகின்றது. இதன் மேலும் 'மனைக்கோழிதினைக்கவர' என்னும் ஓரடியும் இப்பகுதியிற் காணப்படுகின்றது. 'மருதநிலத்தின் மனையிற் கோழிகள் தினையைத் தின்னவும்' எனவுரையுளது. இதனால் மருதநிலத்துக்கோழிகள் குறிஞ்சி நிலத்தே சென்று இரைதேர்தல் அறியலாகும். ஆகவே சோணாடு மருதநிலத்தையடுத்த குறிஞ்சியையுடைய தென்பது சந்தேகத்துக்கிடமின்றித் தெள்ளிதினுணரப்படும்.

சோணாட்டு நகர்கள் பலவற்றினும் வயல்களையடுத்து மயில்கள் உண்மையை நேரேதெரிவித்து அதன்மூலமாய் அந்நாட்டு வளமும் அங்ஙனமே யுளதாகல் வேண்டுமென்றுணர்த்துகின்றன தேவாரமாதிய செழுந்தமிழ்நூல்கள். அந்நாட்டில் மருதமுங் குறிஞ்சியும் மயங்கியுள்ளனவென்பதும் மருதநிலத்தே மயில்கள் தங்குதலுண்டென்பதும் பொருநராற்றுப்படை அறிவிக்கின்றது. பிறிதொரு பழந்தமிழ்நூல் சோழநாட்டிலே வயல்களையடுத்து மயில்களிருந்தனவென்பதை நேரே செவ்விதின் எடுத்துச்சொல்கின்றது. 'பதிற்றுப்பத்து' என்னும் சிறந்த தொகை நூலில், 90-வது செய்யுளில் இவ்விஷயம் காணப்படுகின்றது. அங்கே,

'கழனியுழவர்தண்ணுமையிசைப்பிற்
பழனமஞ்ஞைமழைசெத்தாலுந்
தண்புனலாடுநரார்ப்பொடுமயங்கி
வெம்போர்மள்ளர்தெண்கிணைகறங்கக்
கூழுடைநல்லிலேறுமாறுசிலைப்பச்
செழும்பலவிருந்தகொழும்பஃறண்பணைக்
காவிரிப்படப்பைநன்னாடு'

என்றவரிகள் உள்ளன. உரைகாரர் ஆலும் நாடெனமுடித்துக் காட்டினர். வயிலிடத்து உழவரொழுப்பும் தண்ணுமை யொலியினை மேகமுழக்கிற்றெனக்கருதி ஆண்டுள்ள மயில்கள் ஆரவாரிக்கும் நாடு என்பதுவே இங்குக்கருதப்பட்டபொருள். 13-வது புறப்பாட்டில் 'பழன

மஞ்ஞை', 'கழனியுழவர்' எனப்பயின்று வந்தமைபோலவே இவ் அடிகளின் கண்ணேயும் வருதல் உய்த்துணர்தற்பாலது. உழவரது தண்ணுமை யிசையினைக்கேட்டு மயில்களாடுவன வென்பதன் மேலும் அம் மயில்கள் பழனப்பாக்கரில் உள்ளனவென்பதுஞ் செய்யுள் வெளிப்படக் கூறுகின்றது. ஆகவே சோழவள நாட்டின்கண்ணே பழனங்களையடுத்து மயில்களுளவாதல் அபாதிதப்ரமாணங்களால் நன்கு துணியப்படுவதாகும்.

இனி, 'பழனமஞ்ஞை யுகுத்தபீலி-கழனியுழவர் சூட்டொடுதொகுக்கும்' என்பதன் பொருளையுணர்த்த உரைகாரர் கூறிய சொற்களையே தாமுங்கொண்டு, 'நெற்சூட்டுடனே திரட்டும்' என்ற வுரைப்பகுதியை விளக்கி, அங்ஙனம் விளக்கியதன் மூலமாக மயிலிறகு தனியே தொகுக்கும் தொழினிகழ்ச்சி யுண்மை பெறப்படும் என்றுரைக்கின்றார்கள். 'நெற்கதிரறுத்துச் சூடுதிரட்டி முடியும் பொழுதே மயிற்பீலியுமொருபுடை திரட்டிமுடியும்' எனப்பொருள்படுத்து, "நெல் விளைந்த பழனங்களில் வந்து இரைதேரு "மயிற்கணங்கள் இயல்பாயுகுத்தலாற் கிடக்கும் பீலிகளைக்கதிரறுத்துக் கட்டிவருமள்ளர் நெற்கதிரோடு விரவாதவாறு தனியே திரட்டிக்கொணர்ந்து நெற்சூடு தொகுக்குமளவும் தொகுக்க அவைநெற்சூடுபோலப் பிறிதொரு பீலிச் சூடாகக்குவியும்." என நண்பரவர்கள் விரித்துவிளக்குகின்றார்கள். இப்பொருள் வலிந்துகொள்ளப் படுவதாகும். இயல்பாயமைந்து கிடக்கும் பொருள் பிறிதொன்றிருத்தலின் அது பொருந்தாதெனற்குத் தக்க காரணந் தரப்படினன்றி அப்பொருளே கொள்ளத்தகுவதாம். சாதாரணப்பொருள் எவ்வாறு சிறப்பில்லாததாயிற்று? சிறப்பிற்காக வேண்டி வலிந்தும் நலிந்தும் பொருள்கொள்ளல் தகுதியா? 'கதிரொடு தொகுக்கும் என்னது சூட்டொடுதொகுக்கும்' என்றமையால் தாம் கொண்டதுவே பொருளெனத் துணிகின்றார்கள். இதனால் 'கதிரொடு தொகுக்கும்' என்பது சாதாரணப்பொருளொன்றனையே குறிக்கவல்லதென்றும், இப்பொருளினையே ஆசிரியர்கருதினராயின், மயக்குதற்கிடனின்றிக் கதிரொடுதொகுக்கும்' எனவே கூறியிருப்பரென்றும், அங்ஙனங் கூறாததால் ஆசிரியர் இப்பொருள் கருதினாரல்லரென்றும் அவர்கள் கொள்ளுகின்றார்கள். ஆனால் 'கதிரொடுதொகுக்கும்' என்றே கூறினும் மயக்கத்திற்றீர்ந்த பாடில்லை. இத்தொடரினையும் இருவகையாகப் பொருள்படுத்தல் கூடுமாகலின். ஆகவே சாதாரணமான

பொருளினைக் குறித்தற்குப் புலவர்தந் தொடரினுஞ் சிறந்தவொன்று காண்டற்கரிதாம்.

அன்றியும் நண்பர் கூறும்பொருளுக் கேற்ற நிகழ்ச்சி உலகவழக்கில் யாண்டுங் காணுதலரிதாகும். தொழில் நிகழிடம் வயலும்தொழில் செய்வோர் உழவருமாகலின் நெற்சூடு தொகுத்தலே உரிய முயற்சியாகும்; மயிற்பீலிகளைத் தனியே திரட்டுதலன்று. ஆதலால் நெற்சூடு போலப் பிறிதொரு பீலிச்சூடு தொகுத்தாரென்றல் அசம்பாவிதமாம். மேலும் அங்ஙனம் ஒரு சூடு தொகுக்குமளவு பீலிகளையுகுத்து மயில்கள் இரைதேர்ந்தனவெனின், வயல்களைப் பயிர்செய்வதனால் உழவர்கள் யாதும் பயன்கொள்ள வல்லராகா ரென்பதும் நோக்கத்தகுந்தது. உரைகாரரது கருத்தினையே தாமெடுத்துச் சொல்வதாக நண்பரவர்கள் எண்ணுகின்றார்கள். ஆனால் உரையிலோ நண்பரவர்களது பொருளை யையமின்றித் தெளிவாய்க் குறிக்கவல்ல சொற்கள் யாண்டும் இருப்பதைக்காணேம். உரைகாரர்கருதியது நண்பரவர்கள் கூறியதேயெனின், உரியவிடத்தில் ஏற்றசொற்பெய்து விளக்கியிருப்பர். அங்ஙனமொன்றுங் காணப்பெறாமையானே, உரையின்கருத்து சாதாரணமாய் வெளிப்படும் பொருளே யென்றறியத்தகும்.

மேலே பொதுப்படக்கூறிய நியாயங்கள் உண்மைப்பொருளிதுவென ஒருவாறு சுட்டவல்லனவாம். ஆனால் நண்பரவர்கள் தந்த பொருளொன்றே ஏற்புடையதெனக் கொள்ளினும், அவர்கள்கொண்ட முடிபு பெறப்படுமாறில்லை. "மயிற் பீலிதொகுக்குந் தொழினிகழ்ச்சியுடைய காடு மலைமண்டலமாகிய சேரநாடே யாம்" என்று துணிந்து கூறுகின்றார்கள் இவ்வாறு எங்கே கூறப்பட்டுளது? மயிலினங்கள் எங்கெல்லாமிகுதியாகக் காணப்படுகின்றனவோ அங்கெல்லாம் அவையுதிர்க்கும் பீலிகளைத் தொகுத்துவைக்கும் வழக்க முளதாகல் வேண்டுமன்றே? இவ்வுண்மை சோணாட்டின் விஷயத்தில் மட்டும் பொய்த்துவிடுதற்குக் காரணந்தான் யாதோ? உரியகாரணமொன்று மின்மையின் நண்பரவர்கள் சேரநாடொன்றிலேயே இத்தொழினிகழ்ச்சியுளதென்று முடிவுகண்டது தவறாகும்.

இங்ஙனம் ,'சேரநாட்ட' வெனத்துணிதற்குப் 'பீலிமஞ்ஞையும் நாவியின்பிள்ளையும்' என்னுஞ் சிலப்பதிகார வடியினை ஆதாரமாகத்

தந்தார்கள். சேரன்செங்குட்டுவன் மலைவளங்காணக்கருதி மலைநின் றிழியும் பேரியாறு என்னும் ஆற்றினது கரையில் மணல்மிக்க எக்கரிலே தங்கியிருந்தபொழுது, ஆண்டுள்ள மலைமிசைவாணராகிய வேட்டுவர்கள் திறை சுமந்து நிற்குந்தெவ்வர்போல,

"......................................
ஆளியிணங்கும்அரியின்குருளையும்
வாள்வரிப்பறழும்மதகரிக்களபமும்
குரங்கின்குட்டியுங்குடாவடியுளியமும்
வரையாடுவருடையும்மடமான்மறியும்
காசறைக்கருவும்மாசறுநகுலமும்
பீலிமஞ்ஞையும்நாவியின்பிள்ளையும்
கானக்கோழியும்தேமொழிக்கிள்ளையும்'

கொண்டுசென்று அரசற்கு அடியுறையாக வைத்துப்பணிந்து தாம் கண்ட அற்புதக்காட்சியைத் தெரிவிக்கின்றார்கள். இங்கே மயிற் பீலி தொகுத்து வைக்குஞ் செய்தி கூறப்படவே யில்லையே ! பீலியையுடைய மஞ்ஞையன்றோ அடியுறையாக வைத்தனவற்று ளொன்றாக வுரைக்கப் படுகின்றது ! இங்ஙனமிருப்ப இவ்வரி நண்பரவர்களுக்கு ஆதாரமாதல் எவ்வாற்றானுமில்லை. இதன் பொருளினை நண்பரவர்கள் கூர்ந்து நோக்கினார்களில்லை யெனல் சிறிதும் பொருந்தாது. அவர்கள்போன்ற மகாபண்டிதர்கள் பிறரையுடன் படுத்துதற்பொருட்டு ஆதாரமாவன போலிரண்டொன்றைக் காட்டுதல் பெரிதும் வ்யஸனிக்கத்தக்கதாகும்.

'மயிற்பீலிகொள்ளும் வணிகர் செல்லுமிடம் அதுவே யாதலால்' அவற்றைத் 'தொகுக்குந் தொழினிகழ்ச்சியுடைய நாடுசேரநாடே யாம்' எனக் கூறுகின்றார்கள். இக்காலத்திற்றானும், வணிகர்கள் பீலி கொள்ளுதற் பொருட்டுச் சேரநாட்டுக்குச் செல்கின்றார்களெனற்கு ஆதாரம் யாது? யாங்குளது? புராதன காலத்தும் அவ்வாறேசென்று கொண்டிருந்தன ரென்பதற்குச் சான்றியாது? நண்பரவர்கள் சொல் மட்டுக்கொண்டு இவ்விஷயம் நிச்சயிக்கற்பாலதன்று அவர்கள் வலிந்து கொண்ட பொருளொன்றினின்றும் பிறந்த விஷயமாதலாலே இதனை ராய்ச்சியிப்பொழுது இன்றியமையாததாகத் தோன்றவில்லை. ஆதாரங் காட்டும் பொறுப்பும் அவர்கள் பாலதேயாம். ஆதாரத்தால் ஸ்தாபிக்கப்பெறாத இக்கூற்று அவர்களுக்குச் சிறிதுந்துணை செய்வதன்றாம்.

இதுவரை நிகழ்ந்த ஆராய்ச்சியானே, பழனங்களில் மஞ்ஞையுளதாகச் சோணாடு கூறப்பட்டுள்ளதென்பது மறுக்கவொண்ணாத எடுத்துக்காட்டுகளால் நிலையுறுத்தப்பட்டது; 'நெற்சூட்டுடனே இரட்டும் பீலி' யென்றமையானே பீலிகளைத் தனியே தொகுத்துவைக்கின்றமை பெறப்படாதென்பதும், அதுவே பொருளெனக்கொண்ட விடத்தும் அவ்வாறு தொகுக்கும் வழக்குச் சேரநாடொன்றின் கண்ணேயே யுளதென்பதற்குத்தக்க ஆதாரம் நண்பரவர்களால் தரப்படவில்லையென்பதும், சோணாட்டினு மயில்களுண்மையின் ஆண்டும் அவ்வழக்குஇருந்ததாகல் வேண்டுமென்பதும் விளக்கிக்காட்டப்பட்டன. ஆகவே 'பழனமஞ்ஞை யுகுத்த பீலி-கழனியுழவர் சூட்டொடு தொகுக்கும்' என்ற அடைமொழிகளாற் குறிக்கப்பட்டது சேரநாடேயெனத் துணிதல் பொருத்தமுடைத்தன்று; சோணாட்டிற்கும் அவை பொருந்துவனவாம். கொழுவியமீனும் விளைந்தகள்ளும் சேரநாடொன்றற்கே யுரியனவுமல்ல. மலங்கு, வாளைமுதலியனவும் (புறம்-61) விளையல் வெங்கள்ளும் (புறம் 212) சோணாட்டினு முளவாகக் கூறப்படுகின்றன. ஆதலால் நாட்டிற்கு விசேஷணமாயமைந்த தொடரின் பொருளால் சேரநாடே கருதப்பட்டதென்று துணிதல் ஏற்புடையதன்று; அப்பொருள் சோணாட்டிற்கும் ஒத்தவுரிமையுடையதாகும்.

b: இனி, மேல்வியவகரித்த விசேஷணத்தொடரிற் "தோன்றும் சுவை மகிழ்ச்சியேயாம்" என்றும் 'இது இன்பவடிவாயுள்ளது' என்றும் 'கோயிலனுகிப் பெயர்கதில்லம்ம என்பதிற்றோன்றும் சுவை அச்சமேயாம்' என்றும் 'இது துன்பவடிவாயுள்ள' தென்றும் 'இங்ஙனம் மாறுபட்ட சுவைகளுக்கு ஏககாலத்தில் ஒருபொருள் நிமித்தமாக மாட்டாதாதலால் நாடுகிழவோன் என்றது இங்கு அஞ்சுதற்கு நிமித்தமாகிய சோழனைக்குறியாது மகிழ்தற்கு நிமித்தமாகிய சேரனையே குறிக்குமெனவறிக' என்றும் மாணவ நண்பர் வாதிப்பாராயினர்.

முதலாவது, 'பழனமஞ்ஞையுகுத்தபீலி' யென்றுதொடங்கும் அடைமொழிகளாலே யாதானுமொருசுவை தோன்றுகிறதென்று கொள்ளுதல்கூடயாவர்க்கும் ஒத்த வொருமுடிபன்றாம். அங்ஙனமொரு சுவை தோன்றுகிறதெனக் கொண்டவிடத்தும அது நண்பரவர்கள் கருதிய 'மகிழ்ச்சி' யாகுமா வென்பது ஆராயத்தக்கது 'மகிழ்ச்சியெனினும் உவகை யெனினும் ஒக்கு' மென்றார் அச்சிட்ட

தொல்காப்பியவுரைகாரர். இச்சுவை தோன்றுமாறெங்ஙனமென்று நண்பர்காட்டாது போயினமையின் கருத்து யாதென்பது அறிதற் கரிதாயிருக்கின்றது. மயிற்பீலிசுவையுழவர் நெற்கூட்டுடன் தொகுக்குந் தொழிலினையும், கொழுவியமீனையும் விளைந்த கள்ளையும் விழுநீர் வேலியையுமுடைய நாட்டை யுடையோன் என்று சொல்லுவதன்கண் சுவைதான் எங்கே இருக்கிறது? அதன்மேலும் உவகைச்சுவைக் குறிப்பு யாண்டுளது? இச்சுவைக்கு ஏதுவாகிய பொருள்தான் யாது? இவ்விரு விஷயங்களைச் சுருக்கமாகவேனும் ஆராய்ந்த பின்னன்றே உவகைச்சுவை யுளதென்று அவர்கள் துணிதல் வேண்டும்? அங்ஙனம் ஆராயப்புகாது 'பழனமஞ்ஞை......நாடுகிழவோன்' என்பதிற்றோன்றுஞ் சுவைமகிழ்ச்சியேயாம் என்றுவாளா கூறிவிடுதல் சிறிதும் வன்மையுடையதாகமாட்டாது. இத்தொடர் வாசிப்போரது மனத்தில் உவகைச்சுவை விளக்கும் ஆற்றல் ஒரு சிறிதும் உடையதன்றாம்.

அன்றியும் 'செல்வம் புலனே புணர்வு விளையாட்டு' என்ற நான்கனுள் ஒன்றினைப் பொருளாகக்கொண்டு உவகைச்சுவை தோன்றுமென்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். நண்பரவர்கள் கூறியாங்கு பழனமஞ்ஞை யென்ற தொடரில் உவகைதோன்றுவதுண்மையாயின், அந்நான்கனுள் எதுபற்றி யிச்சுவைபிறந்தது? புலன், புணர்வு, விளையாட்டு இம்மூன்றினடியாகவும் அது பிறக்கவில்லை யென்பது எளிதினுணரத்தகும். 'செல்வம் என்பது நுகர்ச்சி' யென்றார் உரைகாரர். உவகையின் காரணமான செல்வத்தினின்றும் வேறு பிரித்து, 'உடைமை' 'இன்புறல்' எனப் பிறவிரண்டுளவாகத் தொல்காப்பியர் கூறுதலினாலே, அவர்க்கும் 'நுகர்ச்சி' யென்றலே கருத்தென்றறியப்படும். இச் 'செல்வநுகர்ச்சி' இத்தொடருள் யாண்டுங் கூறப்படவில்லை. ஆதலாற் செல்வம் பொருளாகப்பிறந்த வுவகையுமன்றாம். ஆகவே உவகைச் சுவைபிறத்தற்குரிய நான்கு பொருளும் ஈண்டின்மையாலும், இத் 'தொடரில் தோன்றுஞ் சுவை மகிழ்ச்சியேயாம்' எனப்பிரிநிலையேகாரம் பெய்து கூறியதற்கு நேர்மாறாக அச்சுவை நிச்சயமாக ஈண்டில்லை யென்பது தெளியப்படுவதாகும்.

இஃதிங்ஙனமாக, 'நோயிலனாகிப் பெயர்கதிலம்ம' என்ற தொடரில் அச்சச்சுவையே தோன்றுவதாகுமென நிச்சயித்துப் பின்னர்விதி யொன்று தந்து அவ்விதியொடு முரணுகின்றது மேற்கூறிய சுவைகளி

னமைப்பு என்று நண்பரவர்கள் கூறுகின்றார்கள். 'மாறுபட்ட சுவை களுக்கு ஏககாலத்தில் ஒருபொருள் நிமித்தமாகமாட்டாது' என்பது தான் அவ்விதி. இவ்விதி யாண்டுளது என்றறிதற்கு அவாவுடையேன். ஆனால் அதனையறிந்த பின்னரே இவ்விஷயத்தை ஆராயவேண்டுமென் பதில்லை. இவ்விதி தமிழ்நூல் வழக்கொடு மாறுபடுகின்றது என்று காட்டக்கூடுமாயின், அதுவே நண்பரவர்கள் சுவை விஷயமாகக் கூறி யுள்ளன பொருந்தாவெனத் துணிதற்குப் போதியதாகும்.

'ஆடியலழற்குட்டத்து' என்று தொடங்கும் 229-வது புறப்பாட் டினைச் சங்கநூற் பயிற்சியுடையார் யாவரும் அறிவர். இச்செய்யுள் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இன்ன நாளிற்றுஞ்சுமெண அஞ்சி, அவன் துஞ்சிய விடத்துக் கூடலூர் கிழார் இரங்கிப் பாடியது. இதனுள்,

'பறையிசையருவிநன் னாட்டுப்பொருநன்
நோயிலனாயினன் றுமற்றில்லென
அழிந்தநெஞ்சமடியுளம்பரப்ப
அஞ்சினம்'

எனப்பயின்றுவந்துளது. பழனமஞ்ஞை.........நாடுகிழவோன்' என் பதில் நாடு விசேடிக்கப்படுதல் போலவே 'பறையிசையருவிநன்னாடு' என ஈண்டும் நாடுவிசேடிக்கப்படுகின்றது; நாடுகிழவோன் என வந் திருத்தல் போலவே நாட்டுப்பொருநன் என்று இங்குவந்திருக்கின்றது. ஆதலால் 'பழனமஞ்ஞை......நாடு கிழவோன்' என்ற வரிகளிற்றோன் றுவதாக எச்சுவையைக் கொள்ளுகிறார்களோ அச்சுவையினையேதான் 'பறையிசையருவி நன்னாட்டுப் பொருநன்' என்றதன் கண்ணும் நண்ப ரவர்கள் கொள்ளுதல்வேண்டும். எனவே அவர்களது கருத்தில் இவ் வரி மகிழ்ச்சிச்சுவையே பயப்பதாதல் வேண்டும். 'நோயிலனாயினன்று மற்றில்லெண...அஞ்சினம்' என்றவரிகளில் அச்சச்சுவையே தோன்று வதாகும். மேற்காட்டிய இன்பவடிவான மகிழ்ச்சிச்சுவைக்கும், அத னோடு மாறுபட்ட துன்பவடிவான அச்சச் சுவைக்கும் ஏககாலத்தில் ஒருவனே நிமித்தமாகின்றானென்பது செய்யுளை வாசித்த மாத்திரத்தா னறியப்படும்.

இதுபோன்றே, வேள்பாரிதுஞ்சியவழி அவனது மகளிரைப் பார்ப் பார்ப்படுத்து வடக்கிருந்த கபிலர்பாடிய கையறுநிலைச் செய்யுளில் (புறம்-236), அவலச்சுவைக்கு நிமித்தமாகிய வேள்பாரிதானே,

‘கலையுணக்கிழிந்தமுழவுமருள்பெரும்பழஞ்
சிலைகெழுகுறவர்க்கல்குமிசைவாகு
மலைகெழுநாட’

என விளிக்கப்படுகின்றான். இவ்வரிகளும் ‘பழனமஞ்ஞை......காடு கிழவோன்’ என்ற தொடரினைப்போன்றே அமைந்திருத்தலால், அவற்றில் தோன்றுஞ் சுவையும் மகிழ்ச்சியேயென நண்பரவர்கள் கொள்ளுவார்கள். ஆகவே ஈண்டும் அவர்கள் தந்தவிதி நிலைபெறுமை காணப்படும்.

நற்றிணையில்,

‘என்கைக்கொண்டுதன்கண்ணொற்றியுந்
தன்கைக்கொண்டென்னுதல்நீவியு
மன்னைபோலவினியகூறியுங்
கள்வர்போலக்கொடியன்மாதோ
மணியெனவிழிதருமருவிப்பொன்னென
வேங்கைதாயவோங்குமலையடுக்கத்து
ஆடுகழைநிவந்தபைங்கண்மூங்கில்
ஓடுமழைகிழிக்குஞ்சென்னிக்
கோடுயர்பிறங்கன்மலைகிழவோனே’

என்றது 28-வது செய்யுளாகக் காணப்படுகின்றது. இங்கே ‘மணி......கிழவோன்’ என்றவரிகளிற் றோன்றுஞ்சுவை மகிழ்ச்சியென நண்பரவர்களாற் கொள்ளப்படும். இவற்றிற்கு முன்வரியிற்றோன்றுஞ்சுவை அழுகையாகும். இங்ஙனம் மாறுபட்ட விருசுவைகள் ஏககாலத்தில் ஓரேபொருள் நிமித்தமாக வந்துள்ளனவாம்.

மேற்காட்டிய வுதாரணங்கள்போன்று எத்தனையோ தருதல் கூடும். ஆகவே நண்பரவர்கள் கொடுத்துள்ளவிதி தமிழ்நூல் வழக்கிற்கு முற்றும் விரோதமாவதென்பது நன்குதெளியப்படும். அன்றியும் சங்ககாலப் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்தில் அது காணப்

படாததாகும். ஆதலினாலே இவ்விதியின் பிரயோகத்தால் 'நாடுகிழவோன்' என்பது சோழனன்றெனத் துணிதல் கூடாததாகும்.

c. 'பழனமஞ்ஞை......நாடுகிழவோனே' என்ற தொடரினின்றும் இன்னுமொரு நியாயம் எடுக்கப்படுகின்றது. அத்தொடர் துதிவாக்கியமாயமைந்துள்ளதென்றும், அக்காரணத்தானே, அது பயன் பெறுதற்குரிய சோழனைக்குறியாது பயனளித்தற்குரிய சேரனைக்குறித்தல் வேண்டுமென்றும் நண்பரவர்கள் கூறுகின்றார்கள். இங்கே துதிவாக்கியமென்று அவர்கள் சொல்வது புகழ்ச்சிமொழியையாம். முதலாவதாக இவ்வரிகள் துதிவாக்கியமாகுமா என்ற ஐயசங்கையுண்டாகின்றது. ஒருவனது குணம் செயல்முதலியன வியந்து கூறப்படாதவிடத்துப் புகழ்ச்சிதான் எவ்வாறு பெறப்படும்? நாட்டின் வளத்தை வருணித்து இத்தகைய நாட்டினையுடையோன் என்று ஒருபேராசனைக் குறிப்பதாயின், அஃதொரு புகழ்ச்சியாகுமா? ஆதலில்லையென்றே நினைக்கின்றேன். எனவே இத்தொடரினைத் துதிவாக்கியமென்றல் பொருந்தாததாகும்.

இனி இத்தொடர் புகழ்ந்துரைக்கிறதென்றே கொள்ளினும், நண்பரவர்கள் கூறுவன ஏலுமாறில்லை. 'புலிநிறக்கவசம்பூம் பொறிசிதைய- எய்கணைகிழித்தபகட்டெழின்மார்பின்-மறலியன்ன களிற்றுமிசையோனே' யென்ற அடிகள் பயன்பெறுதற்குரிய சோழனைக் குறிக்கின்றன. போரின்கண்ணேர்ந்த விழுப்புண் நிரம்பிய பரந்துயர்ந்தமார்பினன் என்ற கருத்துப்போதரும் பகுதியே ஈண்டு ஆவசியகமாவது. 'விழுப்புண்' என்றது நண்பரவர்களே ஒப்புக்கொண்டதாகும். முடமோசியாரிடம் சேரன்வாய்விட்டு வினவினன் எனக்கொண்டவிடத்தும், அங்ஙனம் வினாவாக வெழுந்த சொற்கள் 'இவன்யார்' என்ற இரண்டேயன்றிப் பிறவாகா. இதனுண்மை செய்யுட்போக்கினால் நன்கு விளங்கும். உரைகாரர்க்கும் இதுவே கருத்தென்பது பின்னர்க்காட்டுகின்றேன். ஆகவே, இத்தொடர் முழுதும் புலவர்தாமே சேரனுக்கு எடுத்துக் கூறியதாகும் என்பதில் சந்தேகமில்லை. 'புறப்புண்' பெறுதல் இழிவாகக் கருதப்பட்டதேயன்றி 'விழுப்புண்'ணினை ஆடவரும் அரசரும் விரும்பிப்பெற்றுத் தமது ஆண்மைக்கோரணிகலமாகப்போற்றி வந்தனரென்பது பண்டைத்தமிழ் நூல்களால் நன்கறியப்படுவதாகும். இங்ஙனமாக, சோழனது பேராண்மையினையே இவ்விழுப்புண் விளக்

குவதாயிற்று. பயன்பெறுதற்குரிய சோழனது பேராண்மையினை யிவ்வாறு புகழ்ந்து பயனளித்தற்குரிய சேரனிடம் கூறுதல் தகுமெனின், அச்சோழனை, 'பிணிகளை நெற்சூட்டுடன் தொகுக்குந்தொழிலினையும் கொழுவியமீனையும் விளைந்த கள்ளையுமுடைய விழுநீர்வேலி நாட்டையுடையோன்' என்று சேரன் முன்னிலையிற் சொல்லுதல் தகுதியிற் சிறிதுங் குன்றுமாறில்லை.

பயனளித்தற் குரியோனுக்குமுன் அதுபெறுதற்குரியோனைச் சிறப்பித்துக் கூறுதல் பிழையென நண்பரவர்கள் கருதுவதுபோற் றோன்றுகின்றது. 201-வது புறப்பாட்டினைச் சிறிது நோக்கும்படி அவர்களைப் பிரார்த்திக்கிறேன். அச்செய்யுள் பாரிமகளிரை இருங் கோவேளிடங்கொண்டு சென்ற கபிலராற் பாடப்பெற்றது. அங்கே பயன்பெறுதற்குரியோராகிய பாரிமகளிர்,—

'ஊருடனிரவலர்க்கருளித்தேருடன்
முல்லைக்கீத்தசெல்லாநல்லிசைப்
படுமணியானைப்பறம்பிற்கோமான்
நெடுமாப்பாரிமகளிர்'

என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்றனர். இங்கே அம்மகளிரது குலப்பெருமை நன்குவிளங்க எடுத்துரைக்கப்படுதலினாலே இதனைத் துதிவாக்கியமென்று கோடலில் யாதோரிழுக்கு மின்றாம். இவ்வாறு புகழ்ந்து சொல்லப்படுவதன் காரணமாகப் பாரிமகளிர் பயன்பெறுதற் குரியோரன்றென முடிவுகாணுதல் எவ்வகையானும் ஏற்புடையதா மாறில்லை. பயன் பெறுந்தகுதியை யெடுத்துக்காட்டுதற் பொருட்டுப் பயன் பெறநிற்போரது சிறப்பினை விளக்கக்கூறுதல் பெருவழக்காகும். இங்ஙனமிருப்பப் பயனளித்தற்குரியோனுக்கு முன் பயனடைதற்குரியோனைப் புகழ்ந்து கூறுவது தவறெனக்கருதுதல் முற்றும் பொருந்தாதாகும். ஆதலால் 'பழனமஞ்ஞை.........நாடுகிழவோன்' என்பது துதிவாக்கியமாதல்பற்றிப் பயனளித்தற்குரிய சேரனைக்குறிப்பதன்றிப் பயன் பெறுதற்குரிய சோழனைக் குறியாதென்று நண்பரவர்கள் கூறுவது சிறிதும் அங்கீகரிக்கத்தக்கதன்று.

S. வையாபுரிப்பிள்ளை B.A., B.L.,

---

# "தொல்காப்பியமும் பிற்காலத்தாரும்."

சார்பெழுத்து வகையில் நன்னூலானது தொல்காப்பியத்தோடு மாறுபடவில்லை என்ற ஒருசாரார் கொள்கையை மேற்கொண்ட சிலர் ஈச்சமடிகட்சிலவும் பெருதுபோயினர். அவர் கூற்றை உலகங்கொள்ளாதெனினும் புலமை நிரம்பாத பலரும் மதிமயங்கி அதனையே உண்மையெனக்கொண்டு இடர்ப்படுவர். ஆதலின் உண்மைப்பொருளை ஆராய்ந்து விளக்குவது எமது கடமையாயிற்று. இது கருதியே முன்னர் விளக்கப்பட்டவைகளைப் பின்னரும் விளக்கும்படி நேர்ந்தது.

ஆசிரியர் 'குற்றியலிகரம் குற்றியலுகரமாய்தமென்ற முப்பாற் புள்ளியும்" சார்பெழுத்தென்றார், என்னை? அவையெல்லாம் "எழுத்தோரன்ன" என்றமைக்கேற்ப யாண்டும் பிரிக்கப்பெறாமலும் முதலெழுத்திற்குரிய அமைதியுறாமலும் வேறாகி இருத்தலின் என்பது.

இனிப் பின்னூல் செய்தாருள் ஒருவர் ஆய்தத்தை முதலெழுத்தோடுகூட்டி முதலெழுத்துக்கண் முப்பத்தொன்றென்று காட்டினார். அவர்கொள்கை பிழைபடுவது கருதிய அந்நூலுரைகாரர் அம்முப்பத்தோரெழுத்துக்களையும் முதலிடைகடையெனப் பகுத்தமைக்கேற்ப ஒருமேற்கோளுங் காட்டினார். அவ்விருவர் கொள்கைகளும் குற்றம், என்னை? உடன்மேலுயிர்வந்தொன்றுதல்போல அவ்வாய்தத்தின்மேல் உயிர்வந்தொன்றாமையானும், உயிர்க்கும் மெய்க்கும் இடையே சார்த்தப்படா விடத்து அது மொழிக்குறுப்பாகாமையானும், அஃது உயிரையும் மெய்யையும் போலப் பிரதானமாகாமையானும் என்பது.

இவர்கள் கொள்கைக்கு மாறாக நன்னூலார் "உயிர்மெய்யாய்த முயிரளபொற்றள பஃகிய இ உ ஐ ஔ மஃகான் றனிநிலை பத்துஞ் சார்பெழுத்தாகும்" என்றார்.

இதனுள் அவர் உயிர்மெய்யைச் சார்பின்பாற் படுத்தியதுங் குற்றம், என்னை? அது வேண்டுழியெல்லாம் பிரிக்கப்பட்டு இரண்டெழுத்தாகக் கொள்ளப்படுவதனானும், அவ்வுயிர்மெய்யெழுத்தை அவரே "இடையவகெடும்" என்றமையானும், ஆசிரியர் நச்சினார்க்கினியரும் வேண்டுழி உயிர்மெய்யை (ஆலிலை என்பதனை ஆல் இலை என்பனபோல)ப் பிரித்துக்கொள்ளலாம் என்றமையானும் பிறவாற்றானும் என்பது.

அவர் ஆய்தக் குறுக்கத்தினைச் சார்பின்பாற் படுத்தியதுங் குற்றம், என்னை? அது சார்பானுதித்தமையானும், முதலெழுத்தினின்றுந் தோன்றிய உயிர்மெய்யை முதலெழுத்தோடு பெய்துவையாமையானும் என்பது.

அவர் தம் கொள்கைக்கேற்ப அவ்வாய்தக்குறுக்கத்தைச் சார்பின் சார்பாகப் பகுத்துக் கூறாமையுங் குற்றம்.

அவர் முதலெழுத்தினின்றும் பிரிந்தவற்றோடு ஆய்தத்தினையும் ஒருபாற்படுத்தியதுங் குற்றம். ஆய்தக்குறுக்கங்கூறியவர் பிறகுறுக்கங்களை எடுத்துக் கூறாமையுங் குற்றம்.

அவர் செய்யுளியலை நோக்கிச் சார்பெழுத்துக்கள் வகுத்தமைக்கேற்ப ஆண்டலகுபெறாத எழுத்துக்களை எல்லாம் தனித்தனி வகுத்துக் கூறாமையுங் குற்றம்.

அவர் அளபெடையைச் சார்பெழுத் தென்றதுங் குற்றம், என்னை? அரைமாத்திரை அளவுபெற்றவை ஒருமாத்திரையாகவும், ஒருமாத்திரை அளவுபெற்றவை இரண்டு மாத்திரையாகி மூன்றுமாத்திரையாகவும் இரண்டு மாத்திரை அளவுபெற்றவை மூன்றுமாத்திரையாகவும் அளவு பெற்றுவந்த எழுத்துக்களைத் தனித்தனி எழுத்துக்களாகக்கொண்டவர் அவ்வாறே படிப்படியாக அளவு பல்கிவருதலை எழுத்துக்களாகக் கொள்ளாமையின் என்பது.

அவர் "குற்றுயிரளபினீறாம்" என்றதுங் குற்றம், என்னை? அளபெடையை இரண்டு எழுத்துக்களாகப் பிரிக்க நேரிடுதலானும், அளபெடுத்தமையைக் குறித்தற்காக எழுதிய குறியை எழுத்தென்றல்

பொருந்தாமையானும், "இனக்குறில்குறியே" எனவும் "மிகலே யவற்றின் குறியாம் வேறே" எனவும் அவரே கூறினமையானும், அக்குறியை வீணே வரிவடிவெழுத்தென்றமையானும் ஒன்றற்கு வரிவடிவாகவும் பிறவற்றிற்குப் பிறவாகவும் பொருடருமாறு சூத்திரஞ்செய்யாமையானும் "அதன்வடிவொழித்திருவயிற் பெயரொடு" என்ற தங்கூற்றுக் கொவ்வாமையானும் பிறவாற்றானும் என்பது.

அவர் "தற்சுட்டளபொழி ஐம்மூவழியு நையும் ஒளவும் முதலற்றாகும்" என்றதுங் குற்றம், என்னை? ஐ ஒளக்கள் மொழியிடத்தளபெழுங்கால் தத்தமக்கியைந்த குறைந்த அளவோடு ஏற்றபெற்றி அளவு பெற்றுவருமென்பது போதரப் பொருடருவதனானும், அக்கருத்து "மூன்றுயிரளபு" என்றதனான் அவ்வளவிற்கு மிகுந்துவருதலைத் தழுவினாற்போலக் குறைந்துவருதலையுந் தழுவிக்கொள்ளக் கிடத்தலானும் பிறவாற்றானும் என்பது.

அவர் "பத்துஞ் சார்பெழுத்தாகும்" என்றதுங் குற்றம், என்னை? பத்தும் வகையாதலானும், பின்னர்ச் "சார்பெழுத்துறுவிரி" எனக் கூறுதலானும் என்பது.

இக்காட்டியவற்றைக்கொண்டு அவர் கூறிய சார்பெழுத்தின் விரியும் பொருந்தாமையுணர்க.

இவற்றானும் பிறவாற்றானும் சார்ந்து வரன் மரபினவாம் எழுத்துக்கள் மூன்றே எனவும் பிறகூற்றுக்கள் பொருந்தா எனவும் கண்டுகொள்க.

இங்ஙனம்

K. S. நவநீதகிருஷ்ண பாரதி,

தலைமைத் தமிழ்ப்பண்டிதன்,

15-11-19. ஸ்ரீராமநாத வித்யாலயம், சுன்னாகம், யாழ்ப்பாணம்.

கடவுள் துணை.

# ஐயவினாத் தொடர்.

---

திங்கள் சூடிய செஞ்சடைத் தேவே .
என அடியேன்போற் றின்னருட் புலவீர்,

(க) நூலாக்கலிங்கம் (பதிற்று-கஉ-உக.) இத்தொடருக்கு அதன் உரையாசிரியர் "ஒருவர் நூலா நூலாகிய பட்டுநூல் முதலாயவற்றாற் செய்த கலிங்கமென்றவாறு." என உரை யெழுதியுள்ளார். இங்கே அடியேனது ஆசிரியர் அவர்கள் தங்களுடைய மாணவர்களுள் ஒருவர் அனுப்பியிருந்த ஒருபட்டை அடியேனுக்குக்காட்டி "இது நூலாமலும், நெய்யாமலும் ஆயது. எங்ஙனமெனில், நூல்நூற்கும் தருணத்திலுள்ள பலபட்டுப்பூச்சிகளை, மழமழப்பானதும், சமமானதும், வேண்டும் அளவோடு கூடியதும், ஆகிய ஓர் இடத்தை அமைத்து அவ்விடத்தை விட்டு அப்பட்டுப்பூச்சிகள் வேறுஇடத்திற்குச் செல்லாவாறு தகைத்து அதனுள் சுயேச்சையாய்த்திரியும்படி விட்டுவைத்தல் வேண்டும். அக்கால் அவை அங்குமிங்கும் அதனுள் ஓடிக்கொண்டேயிருக்கும். அங்ஙனம், ஓடுங்கால் அவற்றினின்றும் இழிந்தபட்டு அக்குறித்த அளவில் முற்றும் பரவிவிடுகிறது. 'பரவியபின்னர்ப் பூச்சிகளைப் புறம்போக்கிக் குறித்தகாலத்தில் அங்கிழிந்திருந்தபட்டை ஒருபட்டாடையாகப் பெயர்த்தெடுத்துவிடலாம். அங்ஙனம் ஆயதே இப்பட்டு சங்கநூல்களிலே நூலாக்கலிங்கம் என்று வருகின்றதல்லவா? அப்பெயர் இத்தகைய பட்டுக்களைச் சுட்டியேஎழுந்திருக்கலாம் என்று எண்ணுகிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். இங்கே அடியேனது ஐயப்பாடுவெளிப்படை.

(உ) சீவகசிந்தாமணியிலே (கரு0க) 'நீண்டுவந்து' என்றதொடருக்கு விசேஷ உரையிலே ஆசிரியர், எச்சகத்தோரும் மெச்சும் புகழ்சேர், உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் "கண்டேன் சீதையை என்றாற்போல" என்று கூறியுள்ளார். இக்காட்டிய 'கண்டேன் சீதையை' என்றதொடர் இராமாவதாரச் சுந்தரகாண்டத்திலுள்ள "கண்டனென்கற்பினுக்கணிகலை" என்றபகுதிக்குரிய கருத்தையே தழு

யிருக்குமா? அங்ஙனமாயின் ஆசிரியரைக் கம்பநாடருக்குப் பிற்பட்ட காலத்தவரென்று ஒருதலையாகக் கூறலாமா? இங்ஙனம் கூறுவதிற் சிலபெரியோர் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கம்பநாடருக்குப் பிற்பட்டவராயிருப்பின் இராமாவதாரத்திற்கு உரையெழுதக் காலமில்லாதிருப்பினும் சில பலபாடல்களைத் தமது பரந்த உரையில் ஆங்காங்கு உதாரணமாகவேனும் காட்டாதொழியார். அங்ஙனம் யாண்டுமில்லையாதலின் கம்பநாடருக்கு முற்பட்டவராகத்தான் இருத்தல்வேண்டும் என்கின்றனரே. உறுதியாது?

(௩) கொல்லிப்பாவை சேலத்திற்கும் ஈரோட்டிற்கும் இடையே ஒரு குறித்த இடத்திலே பொன்மான்போலும் ஒருருவம் பலர்க்குத் தோன்றித் தோன்றி மறைகின்றதே. அது சங்கநூல்களிலே பயின்றுவருங் கொல்லிப்பாவையாமா?

கும்பகோணம் }
23—11—19. }

வேங்கடராம ஐயன்,
தண்டமிழ்த் தொண்டன்.

---

உ
சிவமயம்.

# நூலாசிரியர்.

---

யாப்பருங்கல நூலாசிரியரும், யாப்பருங்கலக் காரிகை நூலாசிரியரும் ஒருவரே என்றும், அவர்பெயர் அமிதசாகரர் என்றும் செந்தமிழ் ௧௮-ந் தொகுதியிலே-௧௧-ம் பகுதியிலே எழுதப்பட்டிருக்கும் கடிதம் கண்டாம். பண்டித சிகாமணி-ஸ்ரீமாது தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் வித்துவசிரோமணி ஸ்ரீ அ. குமாரசுவாமிப்புலவருடைய "யாப்பருங்கலக்காரிகைப் புத்துரையின் முகவுரையிலே, யாப்பருங்கலப்பாயிரத்தின் ஒருபாகத்தை எடுத்துக் கூறிப்பின் யாப்பருங்கலத்து "விரவியு மருவியும் வேறுமொரோவழி—மருவியும் பெறூஉ வழக்கு மன்னவையே" என்னுஞ் சூத்திரத்துச் சூத்திரத்துரையுள் "இந்நூலுடையாரும் மாஞ்சீர்கலியுட்புகா" என்னும் புறனடையானும் பிறவாற்றானும்.....................விளக்கக் கூறினார்" என்பதனால் யாப்பருங்கலம் செய்தாரே காரிகை செய்தவரும் என்பது பெறுதும் என்பதன் கூறினர்.

இருவரும் ஒருவராயின் யாப்பருங்கலம் என்னும் நூலொன்ற நேடைமையாது யாப்பருங்கலக்காரிகை என ஒரே விடயத்தில் வேறு மொரு நூல்செய்த காரணம்யாது? குமாரசுவாமிப்புலவர் உபக்கிரமணி கையிலே "யாப்பருங்கலக்காரிகை என்பது யாப்பருங்கலம் என்னும் நூலுக்கு அங்கமாகக் காரிகைப்பாட்டில் இயற்றப்பட்டநூல்" என் றது என்னை? யாப்பருங்கலத்துக்கு காரிகை எதனால் அங்கமாயிற்று.

குமாரசுவாமிப் புலவரவர்கள் தாமியற்றிய தமிழ்ப்புலவர் சரித் திரத்தில் உபக்கிரமணிகையிலே கஉ-ம் பக்கத்திலே 'யாப்பருங்கல காரரைப்பாயிரகாரர் "அளப்பருங் கடற்பெயரருந் தவத்தோனே" என்பர் சிலர் அளப்பருங் கடற்பெயரோன் என்றது அமிர்தசாகரரை என்பர். சிலர் ரகாரம் நீக்கி அமித சாகரரை என்பர். அமிதம் அள வின்மை என்பதுங் கூறுவர்' என்று அமிதசாகரர் என்னும் பெயர் வேறுபாட்டின் கொள்கையையுங் காட்டினர். அமிதசாகர ரென்பதே அவர் பெயராயின் குணசாகரரும் பிறரும் அமுதசாகரர் என்றது என்னை? "அளப்பருங் கடற்பெயரருந்தவத்தோனே" என்பதில் கடற் பெயர் என்பது பாற்கடலை யுணர்த்தி அமுதசாகரம் என்பதைப் புலப் படுத்தும் எனவும் அளப்பரும் என்பது அதன் விசேடணம் எனவுங் கொண்டாலென்னை?

பாற்கடல் எனப்பொருள்படும் அமுதசாகரப் பெயரன்றி அமித சாகரர் என்பதும் வழக்காறுகுமா? விதான மாலைச்சிறப்புப்பாயிரத்தி லே "பாற்கடலான் பயந்த நாராயணன்" என்புழி "பாற்கடலான்" என்பது அமுதசாகரன் என்னும் நாமத்தை அன்றோ? கடற்பெய ரோன் என்றதனால் சாகரன் என்னும் பாதி நாமம் பெறப்பட்டதன்றி அமுதசாகரன் என்னும் முழுநாமமும் பெறப்பட இல்லையே எனில் பாதி நாமத்தால் முழுநாமம் பெறப்படல் இல்லையோ?" சீவகசிந்தா மணியிலே "திங்கள் விரவிய பெயரினன்" எனப்புத்திசேனனையும், "கந்துநாமன்" என கந்துக்கடனையும் கூறியன முழுநாமங்கள் தாமோ?

இங்ஙனம்,
சிதம்பரநாதன்.
(வண்ணார்பண்ணை.

உ

சிவமயம்.

# முகவுரை.

---

திருவாரூர் இரட்டைமணிமாலை என்னும் இச்சிறு நூலானது பூமகளுக்கு இதயகமலம் போன்றதும் விராட்புருடனுக்கு மூலாதாரத் தானமாயும் சப்தவிடங்க க்ஷேத்திரங்களுள் முதன்மைபெற்றதுமான திருவாரூரின்கண் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான்மீது அத்திருவாரூரின் கண்ணே 'என்கண் காணச்சிறப்புற்றிலகும் தமிழ்க்கிலக்காகிய வைத்தியநாத தேசிகன் இலக்கண விளக்கம் அருந்தவுரை யெழுதினன்' என்று ஈசான தேசிகரால் புகழப்பட்ட இலக்கணவிளக்கமுடையாரைத் தமக்கு ஆறாவது தலைமுறையினராகவுடையவராகிய சதாசிவதேசிகரால் இயற்றப்பட்டது. இவர்கள் இற்றைக்கு 33-வருடங்கட்கு முன்னர் வியவருடத்தில் தமது அறுபத்து நான்காவது வயதில் வியோகமானார்கள் தமது பிதா முதலாயினாரிடத்துக் கல்விபயின்றது மாத்திரமன்றி இயற்றமிழாசிரியரான திருத்தணிகை சரவணப்பெருமாளையர் முதலாயினாரிடம் கல்விகற்றவர்கள் நியாயவாத அலுவலிலமர்ந்திருந்தார்கள். இவர்கள் தம் கையாலெழுதிய ஏடுகளுக்கிடையில் இந்நூலும் காணப்பட்டமையின் அதனை வெளியிடத் துணிந்தேன் என்னாலேற்படும் குற்றங்குறைகளிருப்பின் பொறுத்தருளும்படி பெரியாரை வேண்டுகிறேன்.

இலக்கணவிளக்க பரம்பரை

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

---

உ

சிவமயம்.

# திருவாரூர் இரட்டைமணிமாலை.

## காப்பு—குறள் வெண்பா.

சீராரூர்த் தியாகர்க் கிரட்டைமணி மாலைசெய்யக்
காரானை மாமுகத்தோன் காப்பு.

## நூல்.

ஆழித்தேர்த் தியாக ராவணி படைவதன்முன்
வாழிபெற வறுவர் வந்தடைந்தார்—ஏழுபேர்
தம்மிற் கமலைத் தயாபரனை மேலாக
அம்மகொண் டான்முசுகுந் தன். (௧)

முசுகுந்தனென்பவன் முன்னொரு காலத்தில் மூவுலகு
மிசைசெலு மாறில் விருந்தா சாண்டவ விந்திரற்கோர்
வசையைத் தவிர்த்திக் கமலையிற் றியாகரை வைகுவித்தான்
பசியபொற் கூவிளப் பூசையினால் வந்த பான்மையினே. (௨)

நேசத் தொடுகமலைத் தியாகே சனைநிதமும்
பூசிப்பை நெஞ்சே புனிதமுற்று—பாசமற்றுச்
சாரூப முற்றுத் தனிவீ டடைவை யின்னம்
ஆரூர்ப் பிறந்தவர்போ லாங்கு. (௩)

ஆங்கென்று மீங்கென்றும் பல்பதி தேடி யலைய னெஞ்சே
ஓங்கென்று மாதர் குவிதனம் போல மிளிருமொரு
நீங்கென்றும் வாராச் செழுங்க மலைப்பதித் தியாகர்பதந்
தாங்கென்று முன்கரத் தாலுலகேழினைத் தாங்கிடுமே. (௪)

இடுகே மனமே பிரப்பருக் கென்றும்
விடுகவீ வினைத் தொடர்பை—உடுகளினும்
மின்போல் மிளிரும் விமானத்தின் மேற்றியாகர்
தன்பாத தாமரையைத் தாழ்ந்து. (௫)

தாழை மடலினுட் டாதி னடையை வெண்சோறெனவே
கூழைக் குரண்டங்கள் கொத்துங் கயத்தின் குளிர்கரைவாய்
பீழை மகளிரைக் காத்திலை யாதென் பிரியநெஞ்சே
ஊழை விலக்குநம் தியாகே சரைப்பணி யுத்தமமே. (௬)

உத்தம நற்பதிநந் தியர்கருறை கமலை
முத்தித்தல மொன்றில் முற்றலமா—வைத்ததினால்
இத்தலத்தி லேய்ந்து பிறந்தாரை நெஞ்சேயுன்
கைத்தலத்திற் றூங்கு கனிந்து. (௭)

கனிமூன் று மென் று முதவு பலாவுங்கதலியும்பின்
கனிமூடு மாவும் நிறையப் பொலியு நறும்பொழில்சூழ்
இனிதாங் கமலைப் பதிவாழ் தியாக ரிணையடிகைக்
இனிதாகுந் தாங்குக வேழைநெஞ் சேபிழைத் தோங்குகவே. (௮)

பிழைக்கும் வழியறியாப் பேதைநெஞ்சே சொல்வேன்
பிழைக்கும் வழிகேள் பெருமை—தழைக்கும்
கமலைப் பதியாளுங் கூத்தன் தியாகன்
அமலப் பதங்காண்ப தாம். (௯)

காணத் தருவன கமலைத் தியாகர் கனகபதம்
பூணத் தருவ தணிந்து கழித்த பொலன்கழுநீர்
பேணத் தருவதப் பெம்மா னரிய பெரும்புகழ்ச்சீர்
மாணத் தருவ தவ்வூர்ப் பிறந்தா ருறவாடுவதே. (௧௦)

உறவாட வேண்டிலந்த வூர்ப்பிறத்தல் வேண்டும்
இறவாமை வேண்டி லெழிலார்—நறைவண்
கமலைத் தியாகர் கனந்தனஞ்சீ ரூர்பேர்
அமர்ந்து புகழிலஃ தாம். (௧௧)

ஆம்பலு நெய்தலுஞ் செங்கழு நீரு மலரும் பொய்கை
தாம்பல சூழுங் கமலைத் தியாகர் தமைத்தொழுவாய்
போம்பல தீமையு மாம்பல நன்மையும் பொன்மனமே
தேம்ப லுனக்கினி வாரா தின்னுக்குஞ் சிறந்துறுமே. (௧௨)

சிறந்தகம லாலயத்திற் றோய்ந்து செழும்பொன்
திறந்தேர் விநாயகனைச் சேவித்—துறங்குலவு
வீதிவல மாகிவந்து வீதிவிடங் கப்பெருமாற்
பாதம்பணி வைநெஞ்சே பாக்கு. (௧௩)

பாங்கான பொய்கையும் வீதியுந் தேரும் பழுத்தமரு
நீங்காத சோலையும் வாய்ந்த தியாகர் நிமலபதம்
தாங்காத சென்னியை யென்படைத்தார்செழுந் தாமலரயில்
தூங்காது வைகு மயனு ரிருங்கடல் சூழிடத்தே. (கச)

இடமார் கமலைத் தியாக ரிடங்கார்
நடமார் மலைவல்லித் தாயே—இடமோடு
செல்வா ய்வரிரங்கச் செய்வாய் திடமிலையேல்
சொல்வா யொருசூழ்ச்சி சூழ்ந்து. (கரு)

சூழ்ந்து பலபல யோசனை செய்யலை தூயகொக்கைப்
போழ்ந்தொரு சேவல் மயிலொடுறச் செய்த புண்ணியச்சேய்
தாழ்ந்து நற்றுணை தியாகரை வேண்டித் தளருநமை
வாழ்ந்திடச் செய்யு மனமே கலங்கலை வாழியவே. (கசு)

வேயிற் பிறந்து வியனாரூர் வீதியிலே
தாயாகி வந்து தனிக்கன்றுறச்—சேயூரும்
தேரி லரைத்திட்டு செய்யமனு நீதிகண்ட
பேரைத் தெரித்தானைப் பேண். (கஎ)

பேணு துவிட்ட பரவை யெனும் பெயர்ப் பெண்ணிடைப்
பேணு விக்கும் படிபின் னரும்வேண் டிடமுன்னயன்மால்
காணு முடியடி யவ்விடு கண்டிடச் சுந்தரர்க்காக்
கோணாது சென்ற குரைகழற் கன்பென்றுங் கூறுநெஞ்சே. (கஅ)

நெஞ்சகத்தே வஞ்சமிலா நேயர்க் கருள்செய்யும்
கஞ்ச மலர்மேற் கமலைவாழ்—விஞ்சுபுகழ்
ஆரூர்த் தியாக ரடிக்கமலங் கொண்டுனது
சீரூர்முடிக் கமலஞ் செய். (ககூ)

செய்யிற் சிறந்திட்ட நெல்வேலி யாயிரஞ் செங்கழுநீர்ப்
பொய்கை யைவேலி பொற்கோயிலைவேலி புனிதமலி
செய்ய கமலா லயமோ ரைவேலி செறிந்துளவாம்
வையம் புகழ வளராழித் தேருடை வள்ளலுக்கே. (உ0)

முற்றும்.

தியாகேசனடிகளேசரணம்.

# வாழ்த்து.

மஹா ராஜ ராஜ ஸ்ரீ ராவ்பஹதூர் கே. வீ. ரங்கஸ்வாமிஐயங்கார் அவர்கள்மீது திருவனந்தபுரம் மஹாராஜகீய உயர்தரக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் பீ. எஸ். ராமஸ்வாமிஐயர் பாடியவை.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

(1) நல்'ராவ் பஹதூர்'என் பட்டமதை
நானிலத்தில் உள்ள நல்லோர்
எல்லாரும் இனிதாகக் கொண்டாட
எய்திச்சீ ரங்க நற்கோ
வில்லாரும் எம்பெருமான் இணையடியை
எக்காலும் ஏத்துகின்ற
நல்லான்கே. வீ. ரங்க சாமிஎனும்
நன்னாமம் பூண்ட மேலோன்.

(2) இம்மேலோன் எத்தேச சரித்திரமும்
இறைமாட்சி நூலும் வல்லோன்
எம்மாண்பும் நன்கமைந்த இவனுடைய
சொல்வன்மை கண்டால் யாரும்
'அம்மா'என் றதிசயித்து நிற்பதலால்
'இவற்கெதிரே வாதம் செய்ய
நம்மாலே இயலா'தென் றெப்பொழுதும்
நவிலுதலை நான்கண் டுள்ளேன்.

(3) சென்னைமா நகரிலுள ஸர்வகலா
ஸங்கத்தான் சிறந்த தாகும்
என்னென்ன காரியத்தை எடுத்துக்கொண்
டாலும்அதில் ஊக்கத் தோடு
பன்னாளும் இவன்உழைக்கும் பண்பினையார்
எடுத்துரைக்க வல்லார் ஆவர்?
இன்னோன்றன் நட்பினரை எய்துவிக்கும்
ஏற்றத்திற் குவமை உண்டோ?

4) இவன்செய்யும் நற்றொழிலை எடுத்துரைக்க
என்னாலே இயலா தென்பேன்
இவன்நந்தம் தேசத்திற் கியற்றியுள
நன்மைகளும் பலவா கும்மே;
இவன்சேர தேசத்தும் தமிழ்மங்கை
என்றும்நிலை பெற்று வாழ
நவமாகும் வழிபலவும் நன்கமைத்து
மேன்மையுற வாழ்க நாளும்.